# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 26 திருவள்ளுவர் ஆண்டு 2053 சூலை–2022

## உள்ளே...














# வானிலைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| *Cold weather* – | குளிர்ந்த வானிலை |
| *Cyclone warning* – | புயல் எச்சரிக்கை |
| *Dry weather* – | வறண்ட வானிலை |
| *Fair weather* – | இயல்பு வானிலை |
| *Frost warning* – | உறைபனி எச்சரிக்கை |
| *Gale warning* – | கடுங்காற்று எச்சரிக்கை |
| *Heavy Rainfall warning* – | கனமழை எச்சரிக்கை |
| *Hot weather* – | வெப்ப வானிலை |
| *Hurricane warning* – | கடும்புயல் எச்சரிக்கை |
| *Rain storm* – | புயல்மழை |
| *Rainfall data* – | மழையளவு |
| *Rainfall Records* – | மழையளவுப் பதிவுகள் |
| *Rainy weather* – | மழைப் பருவநிலை |
| *Rainy weather* – | மழை வானிலை |
| *Storm warning centre*– | புயல் எச்சரிக்கை நடுவம் |
| *Temperature dry Bulb* – | வெப்பநிலை உலர்குமிழ் |
| *Temperature Effective* – | வெப்பத்திறன் |
| *Thunder clouds* – | இடி முகில்கள் |
| *Thunder Rain* – | இடி மழை |
| *Thunder squall* – | இடி மழைக்காற்று |
| *Thunder* – | இடி முழக்கம் |
| *Thundery precipition* – | இடி வீழ்வு |
| *Weather analysis* – | வானிலைப் பகுப்பாய்வு |
| *Weather chart* – | வானிலை வரைபடம் |
| *Weather forecast* – | வானிலை முன்குறிப்பு |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (ஆனி)
சூலை – 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே.கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

# தொல்காப்பியர் சொல்லும் ஆண்மை

தமிழ்மொழி பழைமைச் செறிவையும் இலக்கிய வளமையையும் நடுவுநிலைமையையும் தனித்தியங்கும் தன்மையையும் கொண்டு விளங்கும் காரணத்தால் உலகச் செம்மொழிகளின் வரிசையில் உன்னத இடம்பெற்றுள்ளது. இலக்கிய வளமை என்பது தமிழ்மொழியில் உள்ள நூல்களை, படைப்பாளர்களை, அவர்களின் காலத்தை இலக்கியத் தரத்தை அடிப்படையாகக் கொண்டு காணுகையில் மிகப்பெரும் பரப்பினை உடையதாக விளங்குகிறது. தொல்காப்பியம் இன்று நமக்குக் கிடைக்கப்பெற்ற மிகப் பழைமையான, இலக்கிய வடிவில் இருக்கும் இலக்கண நூல். ஆண், பெண் பாகுபாடு பிறப்பால் தோன்றுவது.

"உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே"

(தொல். சொல்.1)

எனும் நூற்பாவில் உலகத்து உயிர்ப்பொருள்களையும் உயிரல்லாத பொருள்களையும் உயர்திணை, அஃறிணை எனும் இருவகையாகத் தொல்காப்பியர் பகுத்துள்ளார். மக்கள் உணர்வை உடைய உயிர்களை உயர்திணை என்றும், மக்கள் உணர்வில்லாதவற்றை அஃறிணை என்றும் சேனாவரையர் குறிப்பிடுகின்றார்.

(தொல். சொல். சேனா. 1).

ஆடவருக்கும் மகளிருக்குமான ஒழுக்கங்கள், நடத்தைகள், பண்புநலன்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர்வழி நின்றும், அவர் மரபுவழி நின்ற பிற தமிழ்ச் சான்றோர்கள்வழி நின்றும் ஆண்மை எனும் சொல்லை நோக்குவோம்.

பொதுவாக, ஆண்மைக்கான அடிப்படைப் பண்பாக நான்கு பண்புகள் கூறப்படும். அவை,

1. அறிவு – கற்றல்வழி, கருத்தியல் வழியில் உண்மை பொய்களை உணரும் தன்மை
2. ஓர்ப்பு – தெளிவுடன், துணிவுடன் ஒன்றை ஆராய்ந்து அணுகும் தன்மை
3. நிறை – பேண வேண்டியவைகளைப் பேணுதல். புறம் தள்ள வேண்டியதைத் தெளிந்து ஒதுக்குதல்
4. கடைப்பிடி – நிலை மாறாது, நிலை மறவாது உறுதியுடன் ஒழுகும் தன்மை

இத்தகைய பண்புகள் எந்த ஆணிடம் இருக்கின்றதோ அவரே ஆண்மைக்கு உரியவர் ஆகிறார்.

தொல்காப்பியர் குறிப்பிடும்போது பெருமையும் உரனும் ஆணின் தன்மைகளாகவும், அச்சம், நாண், மடம் இவை பெண் தன்மைகள் என்றும் கூறுகிறார். ஆண்மை என்பதில் வீரம், கருணை, தாய்மை, நேர்மை, சொன்னசொல் தவறாமை, உணர்வுச் சமநிலை எனப் பல பொருள் பொதிந்துள்ளது. ஒவ்வொரு ஆணுக்குள்ளும் பெண்மை உள்ளது. ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் ஆண்மை உள்ளது.

ஆணுக்குள் பெண்மை என்பதற்கு எம்பெருமான் அனல் வடிவானவன் அன்பே வடிவானவன் தனகுத்தன் எனும் சிவபக்தரின் மனைவிக்குப் பிள்ளைப்பேற்று வேளையில் தாயாய் நின்று உதவியமையையும், காத்து அருளியதையும் அறியலாம். இன்றும் மலைக்கோட்டை இறைவன் தாயுமானவர் என்ற திருப்பெயராலேயே வழங்கப்படுவது இங்கு எண்ணத்தக்கது.

பெண்மைக்குள் ஆண்மை என்பதும் ஒரு வியக்கத்தக்க பண்பே. 1955இல் அமெரிக்காவில் பேருந்தில் பயணித்த கருப்பின பெண்ணான ரோஸ் பார்க்கஸ் இருக்கையில் அமர்ந்திருந்தார். சட்டப்படி வெள்ளை இனத்தவர் பேருந்தில் ஏறியவுடன் கருப்பின மக்கள் எழுந்து இடம்தர வேண்டும். ஆனால் ரோஸ் பார்க்கஸ் அவ்விதம் எழுந்து இடம்தரவில்லை. மேலும், என் உரிமையை ஒருபோதும் விட்டுத்தரமாட்டேன் என்றார். உடன் பயணித்த ஆண்களுக்குக்கூட இல்லாத துணிவு அவருக்கு இருந்தது. பேருந்து குறிப்பிட்ட தொலைவில் இருந்த காவல் நிலையத்தில் நிறுத்தப்பட்டு அவர்மீது வழக்குத் தொடரப்பட்டது.

ஒரு பெண்ணாக இருந்தும் அவரிடம் இருந்த மனத்துணிவு பலரை மாற்றியது. அது ஒரு போராட்ட இயக்கமாக மாறியது. விளைவு... கருப்பின மக்கள் வெள்ளை இனத்தவரைக் கண்டால் எழுந்து இடம் தரவேண்டியது இல்லை என்ற உரிமை சட்டமானது. இதுதான் நாம் போற்றத்தக்க பெண்மையில் ஆண்மை என்பது.

காதலை ஒரு தெய்வப் புணர்ச்சியாகப் போற்றி வளர்த்த தமிழர்கள் அக்காதல் உணர்ச்சிகளுக்குரிய கதைமாந்தர்களான தலைவன், தலைவி ஊழின் வலியால் கூட்டப்பெறுவர் என்று நம்பிக்கை கொண்டிருந்தனர். இவர்கள் பத்துவகைப் பண்புகளில் ஒத்திருக்க வேண்டும் என்றும் நெறி வகுத்தனர்.. தொல்காப்பியர்,

(தொல். சொல். கிளவியாக்கம்)

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

(மெய்ப்பாட்டியல் 25)

என்கிறார். இதில், பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவம், நிறுத்த காமவாயில், நிறைப் பொருத்தம், அருள், உணர்வு, திருப்பொருத்தம் எனும்போது " ஆண்மை என்பதற்கு முயற்சியோடும் செயல்படும் ஊக்கமுடையவன்" என்று பொருள் கூறுகிறார். ஆண்மை – ஆளுமைத்திறன். ஆண் தன்மை வேறு, ஆளுதல் தன்மை வேறு. இதன் முதனிலை உரிச்சொல் ஆள். அதன் முதனிலை உரிச்சொல் ஆண்.

இயற்றலும் ஈட்டலும் தலைவற்கு ஆளுமை
காத்தலும் வகுத்தலும் தலைவிக்கு ஆளுமை

எ.டு.

"அரிதாய அறனெய்தி அருளியோர்க்கு
அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத்
தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயின் பிரிந்த
நங்காதலர்
வருவர் கொல்வயங் கிழாய் வலிப்பல் யான்"
–கலி.11

குடிமை, ஆண்மை என்பன பெரும்பான்மை உயர்திணைப் பண்பே. சிறுபான்மை விரவுப் பெயர் பண்பாக இருப்பினும் சொல்லுவான் குறிப்பினால் உயர்திணைப் பண்பையும் உணர்த்தும். இப்பண்புகள் தம்மை உணர்த்துவதோடு தம்முடைய பண்பாகிய உயர்திணைப் பொருளையும் உணர்த்தும். குடிமை – குடிப் பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கம். (ஒழுக்கம் உடைமை குடிமை. குறள்.33). இரு பேராண்மை செய்த பூசல் (குறுந்.43). தலைவன், தலைவி எனும் இருபெரிய ஆளுமைகளுக்கு ஏற்பட்ட பிணக்கு எனப் பொருள்.

- ஊராண்மை – ஊரை ஆளும் தன்மை (கலி.89)
- வேளாண்மை – விருந்தினரை உபசரிக்கும் உபகாரியாம் தன்மை
- தாளாண்மை – வாட்படையை ஆளும் ஆற்றல் தன்மை (பொரு.107)

ஆண்மை என்ற சொல் ஆளுந்தன்மை, ஆணாகிய தன்மை, ஆள் வினை என்ற முப்பொருள்களை உடைய சொல்லாகும்.

பாடாண் பகுதி ... (பொரு.80) பாடப்படும் ஆண்மகனின் ஒழுக்கம்

ஆண்மை .... கடந்த (புறம். 242) ஆளுந்தன்மை தோன்ற வீரரை வென்ற

" குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே"

ஆண்மை என்ற சொல் பற்றி கூறும்போது, வீரம், வலிமையுடன் அன்பும் நிறைந்த ஆண்மையே சான்றாண்மை என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. சான்றாண்மைக்குத் தமிழகம் தந்த பெருமை மிகப்பெரியதாகும். "தோல் வற்றிச் சாயினுஞ் சான்றாண்மை குன்றாதே" என்பது அறிஞர் நல்லாதனார் கூற்று. நல்ல மகனாய்ப் பிறந்தும் சும்மா திரியாதே. சான்றோன் எனத்திரி என்பது ஔவையின் வாய்மொழி.

அச்சத்தைப் போக்குமாறு நமது முன்னோர்கள் பலரும் ஆன்றோர்களும் சான்றோர்களும் கூறி வந்தனர். புதிய ஆத்திசூடியின் தொடக்கத்தில் மகாகவி,

"ஆண்மை தவறேல்"

என்கிறார். இங்கு அவர் ஆண்மை என்பது ஆண்பால் மட்டுமல்ல. ஆண்மை என்பது வீரம், தீரம், துணிவு, கம்பீரம், வழிகாட்டல், அச்சமின்மை முதலிய சிறப்புகள் கொண்டதாகும் என்கிறார்.

"பக்தியினாலே கல்வி வளரும் பல
காரியம் கையுறும் வீரியம் ஓங்கிடும்
அல்லல் ஒழியும் – நல்ல
ஆண்மை உண்டாகும்"

பக்தியினாலே கிடைக்கப்பெறுகின்ற மகத்தானவைகளில் ஒன்றாக ஆண்மையை இங்கு மகாகவியின் வரிகள் குறிப்பிடுகின்றன.

"அஞ்சேல் அஞ்சேல் என்று கூறி எமக்கு
நல் ஆண்மை சமைப்பவனைப் பல
வெற்றிகள் ஆக்கிக் கொடுப்பவனை
பெருந்திரள் ஆகிப் பணிந்திடுவோம்"

அச்சம் தவிர்த்தால் ஆண்மை விளையும். அச்சம் இல்லாத இடத்தில் ஆண்மை கிடைக்கும் என்றால் ஆண்மையை வீரம் எனலாமா? என்று வினா எழுப்பி நம்மை விழித்தெழச் செய்தவன் பாரதி.

"தொல்லை தீர்த்து உயர்வு கல்வி வெற்றி
சூடும் வீரம் அறிவு ஆண்மை கூடும்"

இங்கு வீரமும் ஆண்மையும் ஒன்றில்லை என்ற விடையும் கிடைக்கிறது. மேலும், தொல்காப்பியர் மரபுநின்று தமிழறிஞர் கதிரைவேற்பிள்ளை அவர்கள் தம் தமிழ்மொழியகராதியில் "ஆட்சி" என்பதற்கு ஆண்மை, ஆளுமை, பழக்கம், முயற்சி எனப் பொருளுரைப்பதும் நோக்கத்தக்கது.

பாலகங்காதர திலகரைப் போற்றிப் பாடும் திலகன் நாமம் என்பதில் துன்பம் என்பதைத் துறத்தலும் சோர்வு என்னும் பேயைத் துரத்தலும், அக்கணத்தில் பூத்த பொலிவோடு மின்னும் மலர் போல எக்கணமும் அன்பெனும் தேன் ஊறித் ததும்பும் தன்மையும் ஆண்மைக்கான அறிகுறிகளாய்ப் பாரதி கூறுகிறார்.

- அன்பளித்து விட்டாய் காளி
  ஆண்மை தந்து விட்டாய்
- மானம் வீரியம் ஆண்மை நன்னேர்மை
  வண்மை யாவும் வழங்குரைச் செய்வேன்

ஞானத்துணிவு கொண்ட தன்மை, பிறர்துயர் தீர்க்கும் தன்மை, வெற்றி தோல்விகளுக்கு அப்பாற்பட்ட தன்மை மென்மையில் மேன்மையான

தன்மை ஆண்மை ஆகும் என்கிறார். மேலும், பேரன்பாகி இருத்தலே ஆண்மை என்கிறார்.

மகாகவியின் வழித்தோன்றலாம் புரட்சிக்கவியும் ஆண்மை என்ற சொல்லுக்குப் பல்வேறு விளக்கம் அளிக்கிறார்.

" திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
மங்கு கடல் இவற்றோடும் பிறந்த
தமிழுடன் பிறந்தோம் நாங்கள்
தமிழுடன் பிறந்தோம் நாங்கள்
ஆண்மை சிங்கத்தின் கூட்டமென்றும்
சிறியோர்க்கு ஞாபகம் செய் முழங்கு சங்கே"

"வீரத்தாய்மார் எங்கே? தமிழ்த்தாய் எங்கே?
தமிழர்களே உங்கள் பெருமை எங்கே?
உங்கள் ஆண்மை எங்கே?

சொற்களை மாற்றுதல் புரட்சிக்கவியிடம் காணப்படும் ஓர் உத்தியாகும். சொற்களை மாற்றிச் சொல்வது கவிஞர்களுக்கு உரிய இயல்பு. தக்க சொல்லைத் தந்து மாற்றம் விளைவிப்பது அவரின் தனிப்போக்காகும்.

நிறைவாக, "ஆண்மை" என்பது ஒரு பெயர்ச்சொல்தான். ஆனாலும் அதற்குப் பாலின பேதமில்லை. ஆணிடத்தில் அன்பு, இரக்கம் போன்ற பெண்மைக் குணங்களும் இருக்க முடியும். பெண்ணிடத்தில் வீரம், துணிவு போன்ற ஆண்மைக் குணங்களும் இருக்க முடியும். அச்சம் தவிர்த்தல் ஆண்மை. அஞ்சுவதற்கு அஞ்சாது செயல்படுதல் ஆண்மை தவறுதல். பெண்களைக் காத்தல் ஆண்மை, அடிமை செய்தல் ஆண்மை தவறுதல். ஆட்சி செய்தல் ஆண்மை, முறையற்ற ஆட்சி செய்தல் ஆண்மை தவறுதல் என்று மகாகவி மிகத் துல்லியமாகக் கூறுகிறார். தாடியைச் சங்க இலக்கியங்களில் "அணல்" என்றும், தாடி வைத்துக்கொள்வது ஆண்மைக்கான அடையாளமாகவும் பல்வேறு இடங்களில் சுட்டப்படுகிறது.

"அடிபுனை தொடுகழல் மைஅணற்
காளைக்குஎன்
தொடி கழித்திடல் யான்யாய் அஞ்சுவலே"
(புறம்.83)

வீரக்கழல் அணிந்தவன், மை போன்ற கரிய தாடியை உடையவன். அத்தகைய தலைவனை எண்ணுந்தோறும் என் கைவளை கழன்று விழுகின்றதே என்பது தலைவியின் கூற்றாக இங்கு அமைகிறது.

"புலம் புக்கனனே! புல் அணற்காளை"
(புறம். 28)

"மதி உடம்படுத்த மைஅணற் காளை"
(அகம். 221)

"மைஅணற் காளையொடு பைய இயலி"
(ஐங்குறு. 389)

அணல் என்பது தாடியைக் குறிக்கும் சொல். மை அணல் என்பது கருமையான தாடியாகும். இங்கு மை அணல் என்று வருகிற இடங்களில் எல்லாம் தலைவன் இளமையும் ஆண்மையும் பொருந்தியவன் என்பதை உணர முடிகிறது. தொல்காப்பியம் தொடங்கி தற்கால இலக்கியம் வரை ஆண்மைக்கான விளக்கங்கள்மிகஅருமையாகக்கொடுக்கப்பட்டுள்ளன. இடையில் நாம்தான் ஆண்மை என்பதைப் பெண்மையை அடக்கி ஆளுதல் எனத் தவறாகப் புரிதல்கொண்டோம். உண்மையில் ஆண்மை என்பது பெண்மையைப் போற்றுதலும், பெண்மையைக் காத்தலும், மொத்தத்தில் மாந்தநேயம் வாழ்வித்தலே ஆண்மையாகும். நிற்க.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "திராவிட மொழிகளின் தொடுமுகம்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், திருமிகு. ஆர்.இ. ஏசர் அவர்களின் "TAMIL LINGUISTIC INTO THE THIRD MILLENNIUM" என்னும் ஆங்கிலக் கட்டுரையின் தொடர்ச்சியும், மலேயாவாழ் தமிழறிஞர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின் "கொரோனா (Corona) ஒரு சொல்லாய்வு விளக்கம்" என்னும் கட்டுரையும், சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களின் "கலைச்சொல்லாக்கத்தில் பழஞ்சொற்களின் பங்கு" என்னும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்குச் சீர்மிகு அணிசேர்க்கின்றன. அப்புலமையோருக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

**எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே**

– தொல்.சொல்.பெயரியல்

# திராவிட மொழிகளின் தொடுமுகம்



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம். பாரிசு

**1. திராவிட(ம்) என்றால்....?**
**2. திராவிட மொழிகள்....?**
**3. திராவிட மொழிகளின் பிரிவுகள்...?**
**4. திராவிட மொழிகளின் சிறப்பியல்புகள்....?**
**5. திராவிட மொழிகளின்.... வழங்கப்படுகின்றன?**
**6. திருந்திய மொழிகள், திருந்தாத மொழிகள்...?**
**7.சிறுமொழிகள், பெருமொழிகள்....?**
**8. திராவிடப்பெருமொழிகள். சிறுஅறிமுகம்....**
**9. திராவிட மொழிகளின் ஒப்புமை....?**
**10. திராவிட மொழிகளை ஆய்வு செய்தவர்களில்....?**

## திராவிட(ம்) என்றால்....?

தென் இந்தியப் பகுதிகளில் வழங்கப்பட்டு வரும் ஒன்றுக்கொன்று தொடர்புடைய மொழிகள் திராவிட மொழிகள் எனப்படுகின்றன. இவை இலக்கண வகையால் ஒரு தனிப்பட்ட பொது அமைப்பினையும், வழங்கும் இடத்தால் ஒரு நெருக்கத்தினையும் கொண்டுள்ளன. திராவிட மொழிகளைப் பேசுவோர்கள் திராவிடர்கள் என அழைக்கப்படுகிறார்கள். ஆகவே திராவிடம் எனப்படுவது இந்தியாவின் தென்னாட்டு மொழிகளையும் மக்களையும் சுட்டுகிறது. மொழிகளைக் குறிப்பதற்கு இச்சொல்லைத் திராவிட மொழிகளை ஆழ்ந்தகன்று ஆராய்ந்த அறிஞர் கால்டுவெல் (R.Caldwell) கையாண்டார். இம்மொழிகளை மேல் நாட்டறிஞர்களும் தமிழறிஞர்களும் ஆய்வு செய்து முடிவுகளை வெளியிட்டிருக்கிறார்கள்.

மொழி என்பது இயற்கையில் பண்பாட்டின் அடித்தளம். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு பண்பாடு இருக்கிறது சிந்துவெளி நாகரிகம், மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகங்களை ஏற்படுத்திச் சிந்து – பஞ்சாப் பள்ளத்தாக்குகளில் நாகரிகத்தோடு வாழ்ந்துவந்த திராவிடர்களை இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியர்கள் தென்பகுதிகளுக்குத் துரத்தியடித்தனர் என்பது வரலாறு. பின்னர் திராவிடப் பண்பாட்டியலில் சமஸ்கிருதப்பண்பாடு ஊடுருவிக் கலப்புப் பண்பாட்டை ஏற்படுத்தியது. உலகமொழிகளைப் பேசுவோரின் கணக்கடிப்படையில், திராவிட மொழிகளை 4 விழுக்காட்டினர் பேசுகின்றனர் என Ethnologue, Languages of the World (Dallas 1999) தகவல் தருகிறது.

| மொழிக்குடும்பங்கள் Langues par familles | பேசுவோர் தொகை( %) Poids en locuteurs 4% | மொழிக் குடும்பம் ( %) Familles linguistiques |
|---|---|---|
| திராவிடம் Dravidien | 4% | 1,205 |

திராவிடம் என்பது திரவிடம் எனக் குறுகிப் பின்னர் திரமிடம், திரமிளம் எனமாறி திரமிளம் தமிளோ எனத் திரிந்து இறுதியாகத் தற்போதுள்ள தமிழ் என மாறியது எனத் திராவிட மொழிகளின் தந்தையான அறிஞர் கால்டுவெல் குறிப்பிட்டார். இதற்கு மறுதலையாகத் தமிழ் தான் திராவிடம் என ஆகியது என்ற கருத்தை ஸ்டென்கனோவ், பாஷம் என்ற ஆய்வறிஞர்களும் கருதினார்கள். தமிழம் – த்ரமிள (ம் ) – த்ரமிட(ம்) –த்ரவிட (ம்) –த்ராவிட (ம்) என்னும் முறையில் தமிழம் என்னும் சொல்லே திராவிடம் எனத் திரிந்தது எனத் தேவநேயப்பாவாணர் அடித்துக்கூறினார். திராவிடம் என்றவடமொழிச் சொல்லிலிருந்துதான் தமிழ் என்ற சொல் உருவாயிற்று எனக் கால்டுவெல் கொடுத்த விளக்கங்கள் ஊன்றி உணர்வாருக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை எனத் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னைத் துணைவேந்தர் ச.அகத்தியலிங்கம் (திராவிட மொழிகள் 1) தெரிவிக்கிறார். எனினும் தமிழ் என்ற பெயருக்கு நிகரான வடமொழிப்பெயர் திராவிடம் என்பதை அனைவரும் ஏற்கின்றனர்.

## திராவிட மொழிகள்....?

மொழிகளுக்கு மூலமொழியாக இருந்த மொழியைத் தொல்மொழி என்பர். தொல் மொழியிலிருந்து தோன்றிய மொழிகள் ஒரே குடும்பத்து இனமொழிகள் எனப்படுகின்றன. தொல்மொழி ஒன்றிலிருந்து பிரிந்து காலத்தாலும் இடத்தாலும் வெவ்வேறு மாற்றம் அடைந்து ஒரு பிரிவு மொழியும் மற்றொரு பிரிவு மொழியும் வெவ்வேறு மொழி எனக் கருதும் பலமொழிகள் இனமொழிகள் ஆகும். திராவிட மொழிகள் 27 எனச் சில அறிஞர்கள் சொல்வர். இன்னும் சிலர் 25 என்பர். ஆனால், இரட்டை முனைவரான ச. அகத்தியலிங்கம் அவர்கள் தமது மொழியியல் நூல்களில் திராவிட மொழிகள் 23 எனச் சொல்வார். திராவிடக்குடும்பத்து மொழிகள் வழங்கப்படும் நிலப்பரப்பினைக் அடிப்படையாகக்கொண்டு தென்திராவிட மொழிகள்.நடுத்திராவிடமொழிகள், வடதிராவிட மொழிகள் என மூன்று வகைப்பாடு செய்யப்பட்டுள்ளன.

| தென் திராவிட மொழிகள் | நடுத்திராவிட மொழிகள் | வடதிராவிட மொழிகள் |
|---|---|---|
| தமிழ்,மலையாளம், கன்னடம், துளு, குடகு, தோடா, கோத்தா,காரகா. | தெலுங்கு, கோண்டி, கோயா,கூயி, கூவி, நாயக்கி, கோலாமி, பர்ஜி,கதபு, கொண்டா,பெங்கோ, மண்டா. | குருக், மால்தோ, பிராகுய்.. |

## திராவிட மொழிகளின் பிரிவுகள்

1) திராவிட மொழிகள் ஒட்டுநிலை மொழி (Agglutinative languages) அமைப்புடைய மொழிகள், அஃது, இம்மொழிகளில் காலஇடைநிலைகள், பால்காட்டும் விகுதிகள் ஆகி யன வினையடிகளோடு ஒட்டியே அமைந்திருக்கின்றன. வந்தாள்=வா+ந்+ த்+ஆள்.

2. அடிப்படைச்சொற்கள் திராவிட மொழிகள் அனைத்திலும் பொதுவாக ஒன்று போலவே உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| தமிழ் | கண்(kan) | கன்னடம் | கண்ணு (kannu) |
| மலையாளம் | கண்ணு(kannu) | பர்ஜி | கெண் (ken) |
| தோடா | கொண் (kon) | குருக் | ஃகன் (kkan) |
| தெலுங்கு, கொடகு | கண்ணு (kannu) | | |

3) திராவிட மொழிகளில் அதிகமான சொற்கள் உயிரெழுத்துகளைக் கொண்டே முடிகின்றன.

4) திராவிட மொழிகளில் உயிர் ஒலியன்களில் குறில், நெடில் வேறுபாடு காணப்படுகின்றன.

5) வாக்கிய அமைப்பில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகியன எங்கு வந்தாலும் பெரும்பாலும் பொருள் மாற்றம் ஏற்படுவது இல்லை.

## திராவிட மொழிகளின்... வழங்கப்படுகின்றன?

| மொழிகள் | வழங்கும் நாடுகள் | மொழிகள் | வழங்கும் நாடுகள் |
|---|---|---|---|
| தமிழ் | இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, பர்மா, பிஜித்தீவு, தென்ஆபிரிக்கா, இந்தோனேசியா, கனடா, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜேர்மனி, சுவிஸ், கயானா, மொரிசியஸ், மடகஸ்கார், அமெரிக்கா, நோர்வே, ஒல்லாந்து. | கோண்டி | ஆந்திரா, மத்திய பிரதேசம். |
| | | குருக் | ஒரிசா, மகாராஷ்டிரா... |
| | | கூயி | பீகார், ஒரிசா, மத்திய பிரதேசம்.<br>ஒரிசா – மகாநதி |
| | | கூவி | ஒரிசா – கஞ்சம், காலகத்தி,<br>ஆந்திரா–விசாகப்பட்டினம் |
| தெலுங்கு | ஆந்திரா,சென்னை,ஒரிசா, தென்னாபிரிக்கா, அமெரிக்கா. | கோயா | ஒரிசா – கோரபுட்; ஆந்திரா – வாரங்கல், கோதாவரி |
| மலையாளம் | கேரளா, இலட்சத்தீவு மற்றும் துபாய், குவைத் முதலான ம.கிழக்கு நாடுகள். | கோலாமி | ஆந்திரா–அதிலாபாத்,<br>மகாராஷ்டிரா– வார்தா |
| கன்னடம் | கர்நாடகம், கோயம்புத்தூர், | கோத்தா | நீலகிரி |
| | சேலம், | பர்ஜி | மத்திய பிரதேசம் – பஸ்தார்<br>ஆந்திரா–சாலூர் |
| | பெல்லாரி, மகாராஷ்டிரா... | கதபா | |
| | | | மகாராஷ்டிரா – சந்தா |
| குடகு | மைசூர் | நாயக்கி | ஒரிசா– கோரபுட், |
| | | | தசமந்துபூர். |
| | | பெங்கோ | |
| துளு | மங்களூர், காசர்கோடு | | பீகார் – சந்தால், |
| | | மால்தோ | மேற்கு வங்காளம் – இராஜ்மகால் |
| | | பிராகூய் | பாகிஸ்தான் – பலுசிஸ்தான்,<br>சிந்து |

பேசுவோர் எண்ணிக்கையில், தெலுங்கு (சுமார் 38,00,00,00 பேர்கள்) முதலாவது இடத்திலும், தோடா (சுமார் 765 பேர்கள்) கடைசி இடத்திலும் இடம்பெறுகின்றன. தமிழே பலநாடுகளில் வழங்கப்படுகிறது

## திருந்திய மொழிகள், திருந்தாத மொழிகள்....?

திராவிட மொழிகளை விரிவாக ஆராய்ந்த கால்டுவெல், எழுத்து வடிவமும் இலக்கிய இலக்கண நெறிகளும் பேச்சு வழக்கும் உள்ள மொழிகளை இலக்கிய / திருந்திய மொழிகள் (Literary / Cultivated languages) எனவும், பேச்சுமொழி மாத்திரம் கொண்ட மொழிகளைத் திருந்தாத மொழிகள் (Uncultivated languages) என இரு பிரிவுகளாகப் பிரித்தார். இம்மொழிகளில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, குடகு என்னும் ஆறு மொழிகள் இலக்கியம் பெற்ற மொழிகள் ஆகும். இவைகளில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளே சிறந்து விளங்குகின்றன.

| | | |
|---|---|---|
| திராவிட மொழிகள் | திருந்திய மொழிகள் | தமிழ், |
| | | மலையாளம், |
| | | கன்னடம் |
| | | தெலுங்கு |
| | | குடகு |
| | | துளு, |
| | திருந்தாத மொழிகள் | கோத்தா |
| | | தோடா, |
| | | கோண்டி |
| | | கூயி |
| | | குருக் |
| | | மால்தோ |

## சிறுமொழிகள், பெருமொழிகள்...?

திராவிட மொழிகளில் தமிழ், தெலுங்கு,மலையாளம், கன்னடம் ஆகியன பெரு மொழிகள். ஏனைய மொழிகள் சிறுமொழிகள்.

| | | | |
|---|---|---|---|
| த–வல்லினம்,<br>மி – மெல்லினம்,<br>ழ் – இடையினம் | தெனுகு–தெலுகு<br>தெலுங்கு | மலை +ஆளும் | கரு (கருமை) –<br>நாடு( இடம் ) –<br>அகம்(உள்) |

பழைய தமிழ் வேங்கட மலைக்கு வடக்கே ஒரு வகையாய்த் திரிந்து தெலுங்கு ஆகவும், மேற்கே மற்றொரு வகையாய்த் திரிந்து கன்னடம் ஆகவும், சேரநாட்டில் இன்னொரு வகையாகப் பிற்காலத்தில் திரிந்து மலையாளம் ஆயிற்று எனவும் கூறுவது உண்டு. தமிழ் மொழியை R.Caldwcll உம் தெலுங்கு மொழியை C.P. Brown உம், கன்னட மொழியை F. Kittel உம், மலையாள மொழியை டாக்டர் H.Gundert உம் ஆராய்ந்தனர்.

## தமிழ்

தமிழ் என்னும் சொல்லுக்குத் தமிழ்ப்பேரகராதி தரும் பொருள்: (1) இனிமை, நீர்மை, (2) இயற்றமிழ். இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூன்று வகையாக வழங்கும் மொழி (3) தமிழ் நூல் (4) தமிழர் (5) தமிழ் நாடு என்பனவாகும். தமிழ் என்னும் சொல் அழகு என்னும் பொருளையும் குறிக்கும். வல்லினம், மெல்லினம், இடையினம் என மூன்றையும் குறிக்கும் வகையில் (த–வல்லினம், மி–மெல்லினம், ழ்–இடையினம்) தமிழ் அமைந்துள்ளது.

திராவிட மொழிகளில் தொன்மை வாய்ந்த, உயர்தனிச்செம்மொழியாய் இலக்கண, இலக்கிய வளம் பெற்றுத் திகழ்கிறது தமிழ்.

## தெலுங்கு

தேன் போன்ற இனிமையுடைய மொழி என்னும் பொருளில் தெனுகு–தெலுகு–தெலுங்கு என்று பெயரமைந்திருக்கலாம். கலிங்கம் முதலான மூன்று லிங்கக் கோயில்களை உடையது என்னும் பொருளுடைய சொல்லாகிய திரிலிங்கம் என்பது திரிந்து தெலுங்கு ஆயிற்று என்பர் ஒரு சிலர். இம்மொழியின் நெடுங்கணக்கானது தேவநாகரி எழுத்தோடு திராவிட மொழிக்கு இன்றியமையாத றகர எழுத்தும் உடையது. இம்மொழிக்கு வடமொழி அறிஞராகிய நன்னயப்பட்டர் நூற்றுக்கு எழுபத்தைந்து

விழுக்காடு வடசொற்கள் கலந்து இலக்கியம் எழுதி வளர்த்தமையால் வடமொழிச் சார்பு மிகுதியாக உள்ளது. ஓசை இன்பத்தில் திராவிடமொழிகளில் முதலிடம் பெறும் இம்மொழிக்கு வடமொழிப்பெயர் ஆந்திரம்.

## மலையாளம்

மலையாளம், மலபார் எனவும் அழைக்கப்படும். மலையாளம் மலை ஆளும், மலை(ப் பகுதி)யை ஆள்பவர் என Caldwell குறிப்பிடுகிறார். சேர நாட்டில் வழங்கிய தமிழே இலக்கியத் தொடர்பு குறைந்தமையினாலும், சோழ, பாண்டிய நாட்டுத் தமிழரோடு உறவு குறைந்தமையினாலும் மிக மிகத் திரிபுற்று மலையாளமாக வந்து புதிய மொழியாகியது. திராவிட மொழிகளின், வினைகளில் உள்ள பால் காட்டும் விகுதிகள் மலையாள வினைகளில் இல்லை. இம்மொழிகளுக்குள் உள்ள மிகப் பெரிய வேறுபாடு இதுவேயாகும். மற்றைய மொழிகளைவிட தமிழுடன் மிக நெருங்கிய உறவுடைய மொழி மலையாளமாகும். மலையாளப் பிரதேசத்துக்கு வடமொழிப்பெயர் கேரளம்.

## கன்னடம்

கர்நாடகம் திரிந்து கன்னடம் ஆனது. கரு (கருமை) நாடு (இடம்) அகம்(உள்). இதன் எழுத்துமுறை தெலுங்கை ஒட்டி அமைந்ததாகும். கன்னடமொழி திராவிட மொழிகளில் பழமையில் தமிழுக்கு அடுத்த இடத்தைப் பிடிக்கிறது. இம்மொழி கருநாடக இசையைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இம்மொழி தெலுங்கு மொழிக்கு நெருங்கிய உறவுடையது.இதற்குக் கன்னரம் என்ற பெயரும் உண்டு.

## திராவிட மொழிகளின் ஒப்புமை...?

ஒன்றுக்கொன்று தொடர்புடைய திராவிட மொழிகள் இலக்கண வகையால் ஒரு தனிப்பட்ட அமைப்பினையும். வழங்குமிடத்தால் ஒரு நெருக்கத்தினையும் கொண்டுள்ளன. தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகியன ஒரு தாய் வயிற்று மக்கள் போன்று பல்வேறு மொழிப்பண்புகளில் தம்முள் தொடர்பு கொண்டவை. ஒலியியல், ஒலியனியல், சொல்லியல் தொடரியல்,சொற்களஞ்சியம், பொருண்மையியல் போன்ற பலபண்புகளில் இவை நெருங்கிய தொடர்பு கொண்டவை.

அ) திராவிட மொழிகளின் உயிர் ஒலிகள் : அ,ஆ.இ.ஈ,உ,ஊ.எ.ஏ.ஒ.ஓ (மொழியியல் அடிப்படை)
ஆ) திராவிட மொழிகளில் மெய் ஒலிகள்: பதினாறு

இ) திராவிட மொழிப் பெயர்ச்சொற்கள் எண், இடம், திணை, பால் ஆகியவற்றைக் காட்டி நிற்பதோடு எட்டு வேற்றுமைகளை ஏற்கின்றன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தமிழ் | ஆறு | குடகு | ஆர் | தெலுங்கு ஆர் | கோலாமி ஆர் |
| மலையாளம் | ஆறுக | கோத்தா | ஆர் | கன்னடம் ஆர் | கோண்டா ஆர் |
| துளு | ஆறுனி | கோலாமி | ஆர் | | |

ஈ) திராவிட மொழிகளில் வேற்றுமை ஏற்கும் அடிச்சொற்களைப் பெயர் என்றும், காலங்காட்டும் இடைநிலைகளை ஏற்கும் அடிச்சொற்களை வினை என்றும் கூறுபடுத்தலாம்.

உ) திராவிட மொழிகளின் ஒற்றுமைக்கூறுகளை விளக்க மூவிடப்பெயர்கள் பெரிதும் துணைபுரிகின்றன

| | | | |
|---|---|---|---|
| தமிழ் | யான், நான் | பெங்கோ | ஆன், ஆநெங் |
| மலையாளம் | ஞான், நான் | மண்டா | ஆன் |
| தெலுங்கு | ஏனு, நேனு | கூயி | ஆனு, நானு |
| கன்னடம் | ஆன், நான் | கூவி | நானு |
| துளு | ஏனு, யானு | பர்ஜி, கதபா | ஆன் |
| குடகு | நா, நி | கோலாமி, நாயக்கி | ஆன் |
| கோத்தா | ஆன் | குருக், மால்தோ | ஏன் |
| கோண்டி | அனா, நன்னா | பிராகூயி | ஈ |
| கோண்டா | நான் | | |

ஊ) திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் தனித்து நின்று சொல்லாகச் செயல்படுகின்றன. வினைச்சொற்களோடு காலஇடைநிலை, எதிர்மறை இடைநிலை, தன் வினை – பிறவினை உருபுகள், பாலறிகிளவிகள் ஆகியன ஒட்டி ஒட்டுநிலையாகப் பெரும்பாலான சொற்கள் அமைகின்றன.

எ) மூலத்திராவிட மொழிகளில் இறந்தகாலம், இறந்தகாலம் அல்லாதன என இரு காலங்களே இருந்தன. இறந்தகாலம் அல்லாத காலத்தில் நிகழ்காலமும் எதிர் காலமும் அடங்கும். காலப்போக்கில் நிகழ்காலம் தனியாகப் பிரிந்து தனிக்காலம் என ஆனது.

ஏ) திராவிட வினைவடிவங்கள் முற்றுகள் என்றும், எச்சங்கள் என்றும் இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முற்றுகளில் அடிச்சொல், காலஇடை நிலைகள், பால்காட்டும் விகுதிகள் ஆகியன இணைந்து நிற்கும். எச்சங்கள் பாலறி கிளவிகளைப் பெறாமலே நிற்கின்றன.

## திராவிட மொழிகளை ஆய்வு செய்தவர்களில்...?

| மேல் நாட்டறிஞர்கள் (ஐரோப்பியர்கள்) | தமிழறிஞர்கள் |
|---|---|
| 01.Francis Whyte Ellis (1816).<br>02. A.D. Campbell (1816)<br>03. William Carey.<br>04. B. Schmidt ( 1837) - Malto<br>05. R. Leech ( 1838) - Brahui.<br>06. Voysey (1844) - Kondi.<br>07.M.Buhler ( 1849) - Pataga<br>08.John Percival ( 1851) - Kui<br>09. Max Muller;<br>10.R.Caldwell (1856). A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages.<br>11. F.O. Schrader.<br>12.G.A. Grierson (1894)<br>13. Sten Konow (1906)<br>14.Jules Bloch (1964)<br>15. M.B. Emeneau - The South Dravidian Languages (1967)<br>16. T.Burrow – Dravidian Studies<br>17. Kamil Zvelebil - Dravidian Linguistics (1990)<br>18. M.Andronov. - Dravidian Languages (1970)<br>19. G.U.Pope. | 1.சுவாமிநாத ஐயர்.<br>2.ஞானப்பிரகாசர்.<br>3.கே.வி. சுப்பையா.<br>4.எஸ்.வி. இராமசுவாமி ஐயர்.<br>5.தெ.பொ.மீ.<br>6. மு.வ.<br>7. பி.எச்.கிருஷ்ணமூர்த்தி<br>8. பி.எஸ். சுப்பிரமணியம்.<br>9. வ.அய்.சுப்பிரமணியம்.<br>10. ஆர். முத்துச்சண்முகன்.<br>11. எஸ்.வி. சண்முகம்.<br>12. என். குமாரசாமி ராஜா.<br>13. ச. அகத்தியலிங்கம் |

## ஒருபொருட் பன்மொழி

**புலி :**

உழுவை,
குயவரி,
கொடுவரி,
பாய்மா,
புல்,
வயமா,
வயவரி,
வரி,
வல்லியம்,
வேங்கை.



# கொரோனா (corona) ஒரு சொல்லாய்வு விளக்கம்



இரா.திருமாவளவன்

துணைத்தலைவர்,
கலைச்சொல்லாக்கக் குழு,
மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,
மலேசியா

உலகமெங்கும் ஒரே மொழி கொரோனா மொழி. மாந்தர் அனைவரையும் மொழி, இன, மத, இட, நிற, சாதி, கொள்கை, நாடு , ஆண்டான், அடிமை , ஏழை, பணக்காரன் எனும் வேறுபாடுகள் இன்றித் தொற்றிக் கொண்டிருக்கும், ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கும் ஒரே மொழி... கண்ணுக்குப் புலப்படாத நுண்ணி, நுண்மியாகிய நச்சில் கொரோனா............ இதனால் மாந்தர் அனைவரின் வாய்கள் மூடப்பட்டிருக்கின்றன, அவர்கள் வாழும் வீடுகள் மூடப்பட்டிருக்கின்றன, பெரும் கொடிய கருவிகள் அடங்கி ஒடுங்கி மூலையில் கிடக்கின்றன; கிடத்தி வைக்கப் பட்டுள்ளன. எங்கே பறந்து எவரைத் தாக்குவது? எந்த நாட்டைச் சீரழிப்பது? பெரும் வல்லரசுகள் அனைத்தையும் இன்று கண்ணுக்குப் புலப்படாத உன் சிற்றடிக்குக் கீழே இருக்க வைத்து விட்டாயே? எல்லாம் வல்லவரை... ஏங்கி ஏங்கி அழுது அழுது புலம்பி நெஞ்சம் நெக்கு நெக்குருகி வேண்டி வந்து காத்தருளுமாறு இறைஞ்சிய காப்பிடங்களே இன்று இறுகிய நிலையில் பூட்டுப் போட்டு மூடப்பட்டுக் கிடக்கின்றன...என்னே உன் வேடிக்கை... கொரோனா இன்று நீயே பேராற்றல் வாய்ந்த, ஆனால் கண்ணுக்கே புலப்படாத அற்ப, நுண் சிறு உயிரி..... பேராற்றல் வாய்ந்த பெருந்திமிர் பிடித்தோரைக் கூட உன் பேரைக் கேட்டாலே அஞ்சி நடுங்க வைத்து விட்டாயே....

கொரோனா, Borrowed from Latin corona ("garland, crown"), from Ancient Greek (korone, "garland, wreath"), from Proto-Indo-European *(s)ker- ("to turn, bend"). Doublet of crown.

என்பது ஒரு சிறு ஆங்கில விளக்கமாகும். உல் >குல்> குள்> கொள்> கொடு என வளைவுப் பொருளிலேயே கொடுமையைக் குறிக்கும். கொடு > கோடு எனத் திரிந்து வளைவுப் பொருளையே குறிக்கும். கொடு> கோடு> கோடகம் = வளைந்த நிலையில் வட்டமாய்த் தோற்றந் தரும் அரசன் மணிமுடி . டகரம் ரகரமாகத் திரிதல் முறையில் கொடு > கொரு என்றும் குள்> குடம்பை> குரம்பை என்றும் திரியும். குல்>குர்> குரங்கு> குரங்குதல் எனின் வளைதல் எனப் பொருள்.

தமிழின் குல் எனும் வளைதற் பொருளில் அமைந்த இவ்வேர் மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளில் கெர் > ker எனத் திரிந்து கொரொனாவுக்கு வளைதல் பொருளிலேயே வேராய் அமைந்துள்ளதை ஆராய்கின்ற வேளை தெரிய வருகின்றது. இந்தோ ஐரோப்பிய மொழிகளின் வேர்ச்சொல் ஆராய்ச்சி அறிஞர் போர்க்கோனி அவர்கள் வழியில் ஆய்வினை மேற்கொண்ட ஆய்வாளர் சி. அல்வர்ட்டு வாட்கின்சு அவர்கள் தம் நூலில் கொரொனா எனும் சொல்லுக்குக் கீழ்க்கண்டவாறு விளக்கம் தந்துள்ளார்(s)ker– To turn, bend.

Presumed base of a number tantly related derivatives. 1. Extended form *(s)

in nasalized form *(s)kre–n–g–. a. SHRINK, from Old English scrincan, to wither, shrivel up, from Germanic *skrink–; b. variant *kre–n–g–. (i) RUCK2, from Old Norse hrukka, a crease, fold; (ii) FLOUNCE!, from old French fronce, pleat, from Frankish *hrunkjan, to wrinkle. Both (i) and (ii) from Germanic *hrunk–. 2. Extended form *(s)kregh– in nasalized form *skren–gh–. a. RING', from Old English hring, a ring; b. RANCH, RANGE, RANK', RINK; ARRANGE, DERANGE, from Old French renc, reng, line, row; C. RING– HALS, from Middle Dutch rinc (combining form ring–), a ring. a–c all from Germanic *hringaz, something curved, circle. 3. Extended form *kreuk–. a. RIDGE, from Old English hrycg, spine, ridge; b. RUCKSACK, from Old High German hrukki, back. Both a and b from Germanic *hrugjaz. 4. Suffixed variant form *kur–wo–, CURB, CURVATURE, CURVE, CURVET, from Latin curvus, bent, curved. 5. Suffixed extended form *kris–ni–. CRINOLINE, from Latin crinis (< *crisnis), hair. 6. Suffixed extended form *kris–ta–. CREST, CRISTA, CRISTATE, from Latin crista, tuft, crest. 7. Suffixed extended form *krip–so–. CREPE, CRISP, CRISPATE, from Latin crispus (metathesized from *cripsus), curly. 8. Extended expressive form *kriss–. CRISSUM, from Latin crisare, (of women) to wiggle the hips during copulation. 9. Perhaps reduplicated form *ki–kr–O–. CERCLAGE, CIRCA, CIRCADIAN, CIRCINATE, CIRCINUS, CIRCLE, CIRCUM–, CIRCUS, CIRQUE, SEARCH; CRICOID, RECHERCHE, RESEARCH, from Greek kirkos, krikos, a ring. 10. Suffixed o–grade form "kor–ono–. CORONA,

CROWN, KORUNA, KRONA, KRONA?, KRONE', KRONE", from Greek korɑnos, curved. 11. Suffixed variant Torm *kur–to–. KURTOSIS, from Greek kurtos, convex. [Pokorny 3. (s)ker–935.) See also extended root(s) kerb–.

உயிர்ப்பாடும் முக்கழகமாய் விளங்கிய பாவாணர் பெருமகனார்,

உல் > குல் எனும் வேருக்கு வளைதற் கருத்து, இயன்முறையில் வளைவு, சுருட்சி, வட்டம், வளையம், உருண்டை, உருளை முதலிய பண்புக் கருத்துகளையும்; செயன்முறையில் வளைதல், சுருள்தல், திரிதல், சூழ்தல், சுற்றுதல், சுழலுதல், உருளுதல் முதலிய வினைக்கருத்து களையும் தழுவும்.

வளைவு என்னும் பண்பின் பெயரும், வளைதல் என்னும் வினையின் பெயரும், அப்பண்பையும் வினையையுங் கொண்ட பொருள்களை ஆகுபெயராகக் குறிக்கும் என விளக்கம் தருவார். இவ்வேரின் அடிப்படையில் பன்னூற்றுக் கணக்கான சொற்கள் வளைவுப் பொருளில் பிறந்துள்ளதை அப்பெருமகனார் தெள்ளிதின் விளக்கியுரைத்துள்ளார்.

உல் > குல் = வளைதல் பொருள் வேர். உல் > குல்> கொள் > கொடு = வளைவு , கோடு = வளைந்த கோடு.

கொரோனா > வட்டமான மணிமுடி ( மகுடம்) எனப்பொருள்.. அந்த வடிவில் இந்த நச்சு நுண்ணி இருப்பதால் இப்பெயர் இட்டனர். கொவிட் 19> அந்த நுண்ணிகளின் ( microorganism) குடும்பத்தின் இன்றைய பிறப்பு. அனைத்தும் ஒரே குடும்பம் . சிறப்புப் பெயராக கொவிட் 19 எனச் சொல்லலாம்.

வளைதல் பொருளில் தமிழ் வேரினை மூல வேராகக் கொண்டு இந்தோ ஐரோப்பிய மொழியில் crown , corona கொரொனா என வழங்கும் இச்சொல் தமிழில் முற்பட்டு முன் தள்ளி முதன்மையாகி விளங்குதல் பொருளில் மகுடம் எனப்பட்டது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் தரப்பட்டுள்ள விளக்கம் பின்வருமாறு :

மகுடம் – magudam, பெ.(n.) 1. மணிமுடி; crown. 2. தலைப்பாகை வகை. ; head–dress, turban, cresft, tiara. 3. புனைவான உச்சி; anything crest – like, as the ornamental topof a temple car. 4.பல பாடல்க ளில் ஒரே வகையில் வரும் முடிவு; finishing part of stanzas in a poem. in the form ofarefrain.5. கட்டுரை முதலியவற்றின் தலைப்பு; title, caption. 6. சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று ; an ancient Saiva scripture, one of 28 civakamam .7. ஓலைச் சுவடியின் மணி முடிச்சுக் கொண்டை ; ornamental button of an olai book. 8. மாதர் காதணி வகை ; a ear–ornament worn by women 9. மத்தளம் முதலிய வற்றின் விளிம்பு; edge of drums. ; a kind of drum. 11. ஒளிமங்கல்; dimness 10. பறை வகை of vision, obscurity. (முகடு (முகடம்) – மகுடம்.] மகிழ் – மகிழம் முகுளம் – முகுடம் – மகுடம். மொட்டுப் போன்ற கூம்பிய மணி முடி.

முகம் – முகடு = மூக்குப்போன்ற கூரையுச்சி. முகடு = உச்சி, வீட்டின் உச்சி, வானமுகடு, தலை, உயர்வு. முகடு (முகடம்) > மகுடம். இனி, முகிழ்> முகிழம் – முகுளம்– முகுடம்– மகுடம் = மொட்டுப் போற் கூம்பிய மணிமுடி என்றுமாம்.

பாவாணரின் வடமொழி வரலாற்றில், மகுடம் – மகுட (t ) முகுட (t.)

முகம் – முகடு = மூக்குப்போன்ற கூரையுச்சி. முகடு =1. உச்சி. "முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவின்" (பெரும்பான் 2. வீட்டின் உச்சி. 3. வானமுகடு. "வானெடு முகட்டையுற்றனன்" (கம்பரா, மருத்து. 30). 4. தலை. "முகடூர் மயிர்கடிந்த செய்கை யாரும்" (தேவா. 936 : 10). 5. உயர்வு. "முனிமை முகடாய மூவா முதல்வன்" (சீவக. 1609). முகடு – (முகடம்) – மகுடம் = உச்சி மயிர்முடி, மணிமுடி, தேர்முடி, ஒருபொருட் பலபாட்டுப் பொது முடிவு.

இனி, முகிழ் – முகிழம் – முகுளம் – முகுடம் – மகுடம் = மொட்டுப்போற் கூம்பிய மணிமுடி என்றுமாம்.

"மாமொட் டொடிந்து........மான்றேர் சிதைய" (பாரத. நான்கா. நாள். 24). பேரா. பரோ. இச் சொல்லைத் தென்சொல்லென்றே கூறுதல் S160T5. (The Sanskrit Language, p. 381).

முகுடம் பிறை வடிவினதென்றும், கிரீடம் குவிந்ததென்றும், மௌலி மும்முனையதென்றும் மா. வி. அ. கூறும்.

என்பது மகுடம் பற்றிய விளக்கமாகும். கொரோனாவின் தமிழ்ப்பெயரை பொருள் ஆய்ந்து புதுவதாக வைத்தல் நலம். முன்பு இதே வட்டப் பொருளில் குருணை நச்சில் எனப் பெயர்ச்சூட்டலாம் என நான் எண்ணியதுண்டு. வட்ட வடிவில் உள்ள நச்சு மருந்து குருணை.. இப்பெயர் தமிழகத்தில் வழக்கில் உண்டு.

அல்லது கோறல் >> கொல்லுதல் எனும் பொருளைத் தரும் வகையில் கோறு+ அனம் > கோறனம் ... எனவும் அமைத்துப் பார்த்தேன். இவ்வாறு அமைத்தால் உயிர்க்கொல்லி நச்சில் எனும் பொருளில் ஆங்கிலச் சொல்லுக்கு ஒப்பிய ஒப்பொலிச் சொல்லாக்கக் கோட்பாட்டின் வழி சொல்லமையும். இருப்பினும் தனிச்சொல்லாகவும் இனிய சொல்லாகவும் சொல்லுதற்கு எளியதாகவும் இருத்தல் வேண்டும் என்பதால் கோறனி நச்சில் என ஒப்பொலி முறையில் பெயர் வைக்கலாம் எனக் கருதுகின்றேன்.

( நச்சில்= வைரசு) உல்> குல் = குத்தல் பொருள் வேர். உல்> குல்> கொல் > கோறு > கோறல் = கொல்லுதல் .

அதே வேளை உல்> குல்>கொல்> கோறு> கோறனம் > கோறனி என வளைவுப் பொருளிலும் இச்சொல் அமையும். இங்குக் கொல்லல் கருத்தும் வளைவு கருத்தும் இயைந்து பொருந்தி வரும். சொல்லாய்வு அறிஞர் இராம். கி அவர்கள் கொற்றம் எனும் சொல்லுக்கு விளக்கம் தருகையில் அகரமுதலிகளில் பயிலாத வளைவுப் பொருளில் அமைந்த கோட்டை என விளக்கஞ் செய்தார். கொல் + து = கொற்று > கொற்றம் என ஒரு கட்டுரையில் விளக்கியிருந்தார். இங்குக் கொல் > கொற்று என வளைவு பொருளில் திரிதல் முறையைக் காட்டியதே நமக்குச் சிறந்த காட்டாகும். வளைவு பொருளில் தமிழில் அமைந்த வேறு சில சொற்களை இங்கு ஒப்பீட்டுகாகக் காணலாம்.

பாவாணரின் வேர்ச்சொல் கட்டுரை

குல் – (குர்) – குரங்கு. குரங்குதல் = வளைதல். "இலைப் பொழில்குரங்கின" (சீவக. 657). குரங்கு = வளைவு. "குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து" (சிலப். 10 157). 2. கொக்கி. OE. cranc, crinc, E. crank.

குரவை = வட்டமாக நின்று பாடியாடுங் கூத்து. Gk. koros (orig. a dance in a ring). L. chorus, E. chorus, choir, quirs.

குருளுதல் = சுருளுதல். "குருண்ட வார்குழல்" (திருவிசை. திருவாலி. 1:3). குருள் =1. மயிர்ச்சுருள். 2. பெண்டிர் தலைமயிர் (பிங்.). வ. குருல. LG., Du.,

O. Fris. krul, G. krol, OE. crol, crul, E. curi.

குருகு = 1. வளையல். "கைகுவி பிடித்துக் குருகணி செறித்த" (கல்லா. 44 22). 2. வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவைப் பொது. 3. நாரை. "வான்பறைக் குருகின் நெடுவரி பொற்ப" (பதிற். 83: 2). 4. ஓதிமம் (அன்னம்). "நீரொழியப் பாலுண் குருகிற் றெரிந்து" (நாலடி. 135). குரகம் = நீர்வாழ் பறவைப் பொது.

AF., OF. grue (crane), OHG., OS. krano, OE. cran, E. crane. குரங்கு – குறங்கு = கொக்கி. குறங்கு – கறங்கு. கறங்கல் = 1. வளைதடி (அக. நி.). 2. சுழற்சி (பிங்.). கறங்குதல் = 1. சூழ்தல். "கறங்கிருள் மாலைக்கும்" (திருவள். 34). 2. சுழலுதல். "பம்பரத்து.... கறங்கிய படிய" (கந்தபு. திருநகரப். 28). ம. கறங்ஙு.

கறங்கு = காற்றாடி. "காண்முக மேற்ற....... கறங்கும்" (கல்லா. கணபதி). கறங்கோலை = ஓலைக்காற்றாடி. "கறங்கோலை கொள்ளிவட்டம்" (திருமந். 2313). ON. hringr, OHG., OS., OE. hring, E. ring.

குர் – குறு – குறள் – குறண்டு. குறண்டுதல் = 1. வளைதல்.2. சுருண்டுகொள்ளுதல். குறண்டல் = கூனல்.

குறடு = வளைந்த பற்றுக் கருவி, குறடுபோற் பற்றும் நண்டு. தெ. கொறடு. குறழ்தல் = குனிதல். "அவனாங்கே பாராக் குறழா" (கலித். 65:10) குறு – கிறு – கிறுக்கு = தலச்சுற்று, கோட்டி (பைத்தியம்). கிறுக்கன்= பித்தன். தெ. கிறுக்கு.கிறுகிறுத்தல் = சுற்றுதல், தலைச்சுற்றால் மயக்கமாதல். தெ. கிரகிர (giragira). கிறுகிறுவாணம் = காற்றாடிபோற் சுற்றும் பொறிவாணம். சொல்லாய்வுப் பேறறிஞர் கு. அரசேந்திரனார் அவர்களும் கொரோனா எனும் சொல்லுக்குத் தனித்து ஆய்வு விளக்கமே செய்துள்ளது குறிப்பிடத் தக்கது. அவர் தமது விளக்கத்தில்

கொரோனா என்ற சொல்லுக்குத் தமிழே மூலமாகும். குட என்ற தமிழ்ச் சொல்லுக்கு வளைவு என்பது பொருள். நாம் தண்ணீர் எடுப்பதற்குப் பயன் படுத்துவது குடமாகும். வண்டியின் சக்கரத்தில் அச்சாணி வெளி வராமல் மூடியிருக்கும் பொருளையும் குடம் என்பர். குட நாடு என்றால் மலை நாடு என்பது பொருள். மலை மேடு பள்ளமாக வளைந்து நெளிந்து இருப்பதால் குட, குட்டம், குடகு, கோடு என்று வளைவு பொருளில் சொல்லமைத்திருந்தனர். திருச்செங்கோடு, விளவங்கோடு, அரவங்கோடு என்றெல்லாம் மலையைக் குறித்துள்ளனர். இதற்கு வளைவுப் பொருளே காரணம். குட , கூடு, கொட்டில், கொடுக்கு, குடில், குடிசை அந்தக் காலத்தில் வட்டமாகச் சுவர் வைத்துக் கட்டியதால் பெயரமைத்தனர். குடம்பை என உடல் கூட்டினைக் குறிப்பர். குடம்பை , டகரம் ரகரமாகத் திரிதல் முறையில் குரம்பை எனவும் திரியும். இதுவும் வளைவுப் பொருளில் அமைந்ததே. குடங்கர் எனுஞ் சொல்லும் வட்டமாகக் கட்டப்பட்ட வீட்டுக்கு இருக்கின்றது. இச்சொல் திருக்குறளில் இடம்பெற்றுள்ளது. குட எனுஞ் சொல் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்குச் சென்று குர என வளைவுப் பொருளிலேயே வழங்குகின்றது. தட > தர, வந்திடு > வந்திரு, பட்டடை > பட்டரை , அடுப்பங்கடை> அடுப்பங்கரை, தடி ( வெட்டுதல்) > தரி எனத் தமிழிலேயே திரிதல் முறையைக் காண்கிறோம். படகு > பர்கு என பிராகுயி மொழியில் திரிந்துள்ளது. கிரிக்கெட் வளைந்த தடி என்றே ஆங்கிலத்தில் விளக்கப்படுகின்றது. Crown என்ற மணிமுடி எனப் பொருள் தரும் சொல் வளைந்து அழகிய வடிவில் காட்சி தருவதால் வளைவுப் பொருளிலேயே அமைந்தது. கொரோனா கிரௌன் எனுஞ் சொல்லோடு உறவுடையதாகும். 1965 இல் இச்சொல் இந்த நச்சிலுக்குப் பெயராகச் சூட்டப்பெற்றது. இதனைக் கண்டுபிடித்தவர்கள் தைரல் , பைனோ எனும் பெயருடைய இரு அறிவியலாளர்கள் ஆவர். இந்த நச்சிலைப் பற்றி அவர்கள் அக்கால் எழுதிய நூலில் விளக்கியுள்ளனர். ( Tyrrell DA, Bynoe ML. Cultivation of viruses from a high proportion of patients with colds. Lancet.) எனக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழகத்தில் ஆய்வாளர் திரு மணிவண்ணன் அவர்கள் சொல்லாய்வு முகநூல் குழுவில் முள்முடித் தொற்றி எனப் பெயரமைத்திருந்தார். இச்சொல் அந்த நச்சிலின் உருத்தோற்றத்தை நேரடியாகவே விளங்க வைக்கும் வண்ணம் உள்ளதாகவே நான் எண்ணுகின்றேன். இது நற்றமிழ்ச் சொல்லாகவும் இருக்கின்றது. இலக்கண வழக்கில் சொல்வதாக இருந்தால் முண்முடி எனலாம். தொற்றுவதற்கும் ஒட்டுவதற்கும் ஏற்றவகையில் மேற்பரப்பில் முள் போல் நீட்டிக் கொண்டிருக்கும். இந்தச் சொல்லை அமைத்த பெருமைக்குரியவர் திரு. மணிவண்ணன் அவர்களே. அன்னாருக்கு எம் நன்றி. வைரஸ் என்பதற்குத் தமிழில் நச்சில் எனும் சொல்லையே நான் வழங்கியிருந்தேன். நச்சுயிரி நஞ்சுள்ள அனைத்து உயிரிகளுக்கும் பொதுவானச் சொல்லாகும். எனவே இல் எனும் சிறுமைப் பின்னொட்டைப் பயன்படுத்தி நச்சில் எனின் மிகப் பொருந்துவதாகும். நுண்மி, நுண்ணி என்பன மிகச் சிறிய நுண்ணுயிர்களைப் பொதுவாகக் குறிக்கும் சொல்லாகும். Micro organism என்பதற்கு இவைப் பொருந்தும்.

முடிவாக Corana virus முண்முடி நச்சில் எனப் பொருள் தரினும் தமிழில் வளைவுப் பொருளில் புதுப்புனைவாகவும் ஒப்பொலி முறையிலும் கோறனி நச்சில் எனப் பெயரமைப்பதே பொருந்துவதாக நான் கருதுகிறேன். இது தனிச் சொல்லாகவும் சொல்லுதற்கு எளியதாகவும் இனியதாகவும் அமையும். பயன்படுத்த விரும்புவார், முனைவார் பயன்படுத்தட்டும். இத்தகு சொல்லாக்கத்தை வழங்குதற்கு என்னைப் பெரிதும் தூண்டிய ஊக்கப்படுத்திய என் கெழுதகை பேருறவார் தூய்தமிழ் நெறியர் ஐயா ந. கருப்பையா அவர்கட்கும் தனித்தமிழே தம் வாழ்வாய் இயங்கும் மேனாள் விரிவுரைஞர் ஐயா இனியனார் அவர்கட்கும் எம் கெழுதகை ஆருயிர்த் தோழர் தமிழியல் சொல்லாய்வறிஞர் இர. திருச்செல்வனார் அவர்கட்கும் எம் நெஞ்சார்ந்த நன்றி.

# கலைச்சொல்லாக்கத்தில் பழஞ்சொற்களின் பங்கு!



முனைவர் **இரா. பன்னிருகைவடிவேலன்**

இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, வேல்ஸ் அறிவியல் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிறுவனம், சென்னை 600 117

மொழிக்கு அபரிமிதமான சக்தி உள்ளது, அதன் தாக்கம் நாம் அதை எவ்வாறு பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்தது. சொற்கள் தானாகவும் அறியாமலும் அடிக்கடி பயன்படுத்தப்படுவதால், அவற்றை எளிமையாகக் கற்றுக்கொண்டோம். அன்றாட உரையாடலில், தெளிவான நோக்கத்தில் இருந்து பேசாமல், பழக்கம், வசதி மற்றும் சமூகக் கடமை ஆகியவற்றிலிருந்து பெரும்பாலான வார்த்தைகளைப் பேசுகிறோம்.

பேச்சு, எழுதுதல் மற்றும் வாசிப்பு ஆகியவை அன்றாட வாழ்வில் ஒருங்கிணைந்தவையாகும். அங்கு மொழி, வெளிப்பாடு மற்றும் தொடர்புக்கான முதன்மை கருவியாகும். மக்கள் எவ்வாறு மொழியைப் பயன்படுத்துகிறார்கள் – அவர்கள் அறியாமலேயே என்னென்ன வார்த்தைகள் மற்றும் சொற்றொடர்களைத் தேர்ந்தெடுத்து ஒருங்கிணைக்கிறார்கள் என்பதைப் படிப்பது – நம்மை நாமே நன்றாகப் புரிந்துகொள்ளவும், சொற்களின் பயன்பாட்டை அறிந்து கொள்ளவும் உதவுகிறது.

மொழியியல் அறிஞர்கள் நாம் பயன்படுத்தும் மொழியின் தனித்துவத்தையும் உலகளாவிய தன்மையையும், அம்மொழி எவ்வாறு உருவாகிறது, காலப்போக்கில் அது எவ்வாறு மாறுகிறது என்பதையும் தீர்மானிக்க முயல்கின்றனர். அவர்கள் மொழியை ஒரு கலாச்சார, சமூக மற்றும் உளவியல் நிகழ்வாகக் கருதுகின்றனர்.

உலகம் முழுவதும் மக்கள் சுமார் 7,000 மொழிகளைப் பேசுகிறார்கள். மொழிகளுக்கிடையே பொதுவானது மிகுதியான இருந்தாலும், ஒவ்வொன்றும் அதன் கட்டமைப்பிலும், பேசும் மக்களின் கலாச்சாரத்தைப் பிரதிபலிக்கும் விதத்திலும் தனித்துவமானது.

நம்முடைய மொழியைத் தவிர மற்ற மொழிகளைப் படிப்பது முக்கியம். ஏனென்றால் மனிதர்கள் ஒருவருக்கொருவர் தொடர்புகொள்வதற்கான தனித்துவமான வழியின் அடித்தளத்தில் ஒவ்வொரு மொழியும் சிற்சில மாறுபாடுகள் அடைவதை மொழியியல் அறிஞர்களால் வரையறுக்க பயன்படும்.

ஒரு மொழியில் சொற்களின் பயன்பாடு இன்றியமையாதது. காலத்தின் போக்கிற்கும் சமுதாயத்தின் தேவைக்கும் ஏற்ப மொழியின் சொற்றொகுதியானது விரிவடையும். அப்போது தான் அம்மொழி வளர்ச்சி தேக்கமின்றி திகழ்வதாகவும், பயன்பாட்டில் இருப்பதாகவும் உணரப்படும் இல்லையெனில் அம்மொழி வாழும் நிலையை இழந்துவிடும். இவ்வாறு காலத்தின் தேவைக்கேற்ப, வளர்ந்துவரும் அறிவியல் முன்னேற்றக் கருத்துக்களை வெளிப்படுத்த தமிழில் எண்ணற்ற சொற்கள் புதிதாக முகிழ்த்துக்கொண்டிருக்கின்றன. இவற்றைப் பயன்பாட்டு நோக்கில் பொதுச்சொற்கள், துறைசார் சொற்கள் என வகைப்படுத்தலாம். பொதுச்சொற்கள் என்பவை அனைவரும் அறியும் வகையிலானவை. துறைச்சொற்கள் இதிலிருந்து சிறிது விலகிக் குறிப்பிட்ட கலையில் வல்ல ஒரு சாராருக்கு மட்டும் விளங்கும் வகையில் அமைவது ஆகும். இவற்றையே கலைச்சொற்கள் என்று வழங்குகிறோம்.

**கலைச்சொல்லாக்கம்:** "பொது வழக்கிலிருந்து சிறிது விலகிச் சிறப்பு வழக்காக ஒரு வரையறுத்த பொருளில் ஒரு குறிப்பிட்ட துறையில் புழங்கும் சொல்லே கலைச்சொல்" (இராமசுந்தரம், 1999, ப. 53) ஆகும்.

தமிழில் கலைச்சொற்கள் பண்டுதொட்டே காணப்படுகின்றன. இலக்கண இலக்கியக் கல்வியும், தொழில்நுட்பக் கல்வியும் தமிழ்வழிப் பயிலப்பட்ட காலத்து அதற்கான கலைச்சொற்கள் உருவாக்கப்பட்டன. பிங்கல நிகண்டு கரு (சினை, சூல், வயர்), நரம்பு, எலும்பு, பூப்பகம் (பெண்குறி), ஈரல் என்றவாறு மனித உறுப்புகளின் பல பெயர்களை வரிசைப்படுத்துகிறது. சித்த மருத்துவம் தொடர்பான பல அரிய சொற்களும் செய்திகளும் இடம்பெற்றுள்ளன. இவை போன்ற எண்ணற்ற கலைச்சொற்கள் தமிழில் பண்டுதொட்டே இருந்து வந்துள்ளன. எனினும் வளர்ந்து வரும் அறிவியல் தொழில்நுட்பச் சிந்தனைகளை விளக்குவதற்குப் புதிய பல சொற்களை நாம் உருவாக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. இவ்வாறு புதிய சொற்களை உருவாக்கும்போது பழைய சொற்களிலிருந்து பொருத்தமானவற்றைத் தேடியோ புதிதாக உருவாக்கியோ கலைச்சொற்கள் உருவாக்கப்படுகின்றன. இம்முயற்சி கடந்த சில நூற்றாண்டுகளில் தீவிரம் அடைந்துள்ளது. இவற்றுள் பழைய சொற்கள் கலைச்சொல்லாக்கத்திற்கு எவ்வாறு பயன்படுகிறது என்பதைக் காண்போம்.

மொழிவளர்ச்சியில் பழைய சொற்கள்: பிறமொழிச் சொற்களை மொழிபெயர்க்கும் போதோ, புதிய கண்டுபிடிப்புகளை அல்லது கருத்துகளை வெளியிடும்போதோ நாம் கூறவிரும்பும் கருத்துக்கு ஏற்புடைய சொற்கள் பண்டைத் தமிழில் இருப்பின் அவற்றைப் பயன்படுத்துவதே, பழைய சொல்லுக்குப் புதுப்பொருள் தருதல் ஆகும். இவ்வாறே பழைய சொற்கள் கலைச்சொல்லாக்கத்திற்குப் பயன்படுகின்றன. இம்மரபு நம்மிடையே தொடர்ந்து வந்துகொண்டுள்ளது.

சான்றாக, 'அழுத்தம்' என்னும் சொல்லைக் கூறலாம் இச்சொல் ஆதரவு என்னும் பொருளில், "எழுத்து லவரய அப்பார் ஆதிக்கு என்றும் அழுத்தம் அதுஆய் நிற்கும்". என்றவாறு சைவ சித்தாந்த நூல்களுள் ஒன்றான உண்மை விளக்கத்துள் (6:34) அமைந்துள்ளது. இச்சொல் இன்று, "நிறை அல்லது விசை ஒரு பரப்பின் மேல் செலுத்தும் தாக்கம் – Pressure (க்ரியா, 1992) என்னும் சிறப்புப் பொருளைக் குறித்த ஓர் இயற்பியல் கலைச்சொல்லாகப் பயன்படுகிறது.

இதுமட்டுமன்றிப் பழைய சொல் தன் பொருளை இழந்தோ, கூடுதலாகப் புதுப்பொருளை ஏற்றோ சொல்லாக்கத்திற்குத் துணை நிற்கின்றன. இவற்றுள் ஒரு சொல் தனக்குரிய பொருளை இழந்து வேறு பொருள்

ஏற்பதை சொற்பொருள் மாற்றம் என்பர். சான்றாக, இன்று சென்னைப் பகுதியில் மிகுதியாக வழங்கிவரும் 'கலாய்த்தல்' என்ற சொல்லைக் காண்போம். இச்சொல் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளது.

"......வெய்தாய்க்

கலாய்த் தொலைப் பருகுவார் போற்

கன்னியர் துவன்றினாரே

கண்ணிய வீணைவாட்போர்

கலாமின்றிகாண்டு மென்றே

தம்மின் கலாய்க்குறின்

தடக்கை மீனிமை தாங்குமின்".

கலாய் எனும் முதனிலையில் இருந்து கலாய்த்து, கலாய்க்குறின் என்ற வினையெச்சங்களும் கலாம் எனும் பெயர்ச்சொல்லும் தோன்றுகின்றன. கலாய்-த்தல் என்பதற்குக் கோபித்தல், சண்டையிடுதல், என்பது பொருள். கலாம் என்பதற்கு மாறுபாடு என்பது பொருள். இவற்றை இப்பாடலின் வழி அறியமுடிகிறது. நாற்றம் தனது நறுமணத்தை இழந்தது போல இச்சொல்லும் தன் பழைய பொருளை இழந்து கேலிசெய்தல், ஏமாற்றுதல் எனும் புதிய பொருளில் இன்று வழங்கிவருகிறது. இத்தகைய சொற்பொருள் மாற்றங்களும் மொழிவளர்ச்சியில் கவனிக்கத்தக்கன.

அடுத்து, பழைய சொல் தன் பொருளுடன் மேலும் ஒரு புதிய பொருளை ஏற்றுவருதலாகும். இதற்குச் சான்றாகச் கசி-தல் எனும் வினைச்சொல்லைக் கூறலாம். இச்சொல்லுக்கு 'ஈரமுறுதல், வியர்த்தல், உப்பு முதலியன இளகுதல், அழுதல், நெகிழ்தல்' என்னும் ஐந்து பொருள்களைக் கூறுகிறது தமிழ்ப்பேரகராதி. இவற்றுள் இல்லாத பொருளாக, 'மிகச் சிறிய திறப்பின் வழியாக வாயு முதலியன வெளியேறுதல்' என்னும் பொருளைக் 'க்ரியா' அகராதி கொடுத்துள்ளது. இவை அனைத்தும் இணைந்து அறுபொருள் கொண்ட 'கசி-தல்' எனும் வினைச்சொல் தற்காலத்தில், 'இரகசியமான ஒரு செய்தி பலர் அறியும்படி வெளியே வருதல்' (செய்தி கசிந்தது) என்னும் ஏழாவது பொருளை ஏற்று வருகிறது இவ்வகையிலான சொற்கள் பழையனவாக இருப்பினும் புதிய பொருளைத் தாங்கி வருவதால் இவற்றையும் அவ்வக்காலத்துக்கு ஏற்ற புதுவரவில் அடக்கலாம்.

இவ்வாறு பழைய சொற்களானவை தன் பொருளை இழந்து, புதுப்பொருளை ஏற்று சொற்பொருள் மாற்றத்திலும், தன் பொருளோடு புதுப்பொருளை ஏற்றுக் கலைச்சொல்லாக்கம் மற்றும் சொல்லாக்கத்திலும் பயன்பட்டு மொழிவளர்ச்சிக்கு உறுதுணையாக நிற்கின்றன. இவற்றுள் கலைச்சொல்லாக்கத்தில் இன்று பயன்படுத்தப்பட்டு வரும் பழையசொற்கள் சிலவற்றைக் காண்போம்.

**கலைச்சொல்லாக்கத்தில் பழைய சொற்கள்:**

வளர்ந்துவரும் அறிவியல் யுகத்தில் பல்வேறு புதிய கண்டுபிடிப்புகளையும், சிந்தனைகளையும் குறிப்பிட புதிய சொற்கள் உருவாக்கத் தேவை ஏற்படுகிறது. அப்போது, ஒலிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பு மூலமாக, அச்சொற்கள் உருவாக்கப்படுகின்றன. இதில் மொழிபெயர்ப்பு செய்வோர்க்கு உதவியாக இருப்பன பழைய சொற்கள்.

இவ்வகையில் பயன்படுத்தப்பட்டுள்ள சில சொற்களைக் காண்போம்.

1. இணையம்: இச்சொல், 1992இல் வெளிவந்த க்ரியா அகராதியில் இடம்பெற்றுள்ளது. அந்த அகராதி அக்காலத்தில் பெரும்பான்மையாக வழங்கிவரும் சொல் (பெ.வ) என்று இதனைக் குறிப்பிட்டுள்ளது. இச்சொல்லுக்கான பொருள்: "(பல மாநிலங்களின் அல்லது பல சங்கங்களின்) கூட்டமைப்பு; Federation; Union (க்ரியா, 1992) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு 'Union' என்பதற்கு நேரான சொல்லாகவே 'இணையம்' அமைந்துள்ளது. ஆனால், இன்று இச்சொல் 'Internet' என்பதற்கு இணையாகப் பெருவழக்குடன் திகழ்கிறது. இதிலிருந்து 1992க்குப் பின்பே இணையம் எனும் சொல் Internet என்னும் புதுப்பொருளை ஏற்று வந்திருக்க வேண்டும் என்பதை உணர்கிறோம். இது பழைய சொல்லாக இருப்பதால் நிலைபேறு அடைவதில் சிக்கல் இல்லை. இச்சொல் இன்று பல கூட்டுச் சொற்களையும் உருவாக்கியுள்ளது. இணைய அரட்டை, இணையதளம், இணைய இதழ் என்பன அவற்றுள் சில.

2. அரட்டை: இச்சொல், 'பொழுதுபோக்க மற்றவருடன் நேரில் பேசும் பேச்சு' என்பதிலிருந்து விரிந்து 'இணையம் வழிப் பேசும் பேச்சு' எனும் புதுப் பொருளை ஏற்று வந்துள்ளது (Chat) குறிப்பிடத்தக்கது.

3. பூங்கா: இச்சொல், "(பெரும்பாலும் நகரத்தில்) பூச்செடிகள், மரங்கள் ஆகியவற்றோடு புல்வெளியும் இருக்கும்படி அமைந்த பொது இடம்." Park. (க்ரியா, 1992) என்ற பொருளில் அமைந்துள்ளது. ஆனால், இச்சொல் பயன்பாடு இன்று வேறு பொருளில் விரிவடைந்து வருவதைக் காணாலம். அது,

தொழில் நுட்பப் பூங்கா, தொழிற் பூங்கா, உணவுப் பூங்கா, மருத்துவப் பூங்கா, புத்தகப் பூங்கா இவற்றுள் பூங்கா என்னும் சொல்லின் முன் இணைந்துள்ள சொற்கள் அனைத்தும் பல்வேறு பிரிவுகளை உள்ளடக்கிய ஒரு துறைச் சொற்களாகவே உள்ளதைக் காணலாம். இச்சொற்கள் பூங்காவின் இயற்கையை நீக்கிச் செயற்கைத் தன்மைக்கு இட்டுச் செல்கின்றன. இச்சொற்களின் பொருள்களைப் பின்வருமாறு ஒன்றுபடுத்திக் கூறலாம். அது,

பூங்கா: '(துறைச் சொற்களுக்குப் பின் வருகையில்) தான் இணையும் சொற்பொருளின் பல்வேறு பிரிவுகளை உள்ளடக்கிய இடம்'. என்பதாகும். இது பூங்காவிற்கான நான்காவது பொருளாக விரிவு பெறுகிறது. இப்பொருள் தாவரவியல் பூங்கா, உயிரியல் பூங்கா ஆகிய சொற்களுக்கும் பொருந்துவதாக அமைந்துள்ளது. இவை தவிர, அமைதிப் பூங்கா, தொல்காப்பியப் பூங்கா என்பவை போன்று உருவகமாகப் பூங்காவைக் கையாளும் போக்கும் இன்று மிகுந்து வருகிறது.

அறுவடை: இச்சொல்லிற்கு க்ரியா அகராதியில் (1992) "தானியங்களைப் பெறுவதற்காக முற்றிய கதிர் நிறைந்த தாளை அறுக்கும் செயல்" என்ற ஒரு பொருளே கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வகராதியின் திருத்திய பதிப்பில் (2008) இரண்டாம் பொருளாக, "(பயிர்) விளைச்சல்; மகசூல்" (Harvest) எனும் பொருள் இணைந்துள்ளது. இச்சொல் 2002, 2003இல் நாளேடுகளிலும் இதழ்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ள தன்மையைக் காண்போம்.

30-40 நாட்களுக்குள் பழம் அறுவடைக்கு வந்துவிடும். (வளர்தொழில், ஜூலை 03, ப. 64) இங்கு அறுவடை பழத்தைப் பறித்தல் எனும் செயலுக்கு வந்துள்ளது. இது மட்டுமன்றி "நீர் அறுவடை (Water Harvesting) மற்றும் நீர் சேகரிப்பு எல்லோரும் எல்லா இடங்களிலும் செயல்படுத்தல்" (தினமணி. 12.03.03. ப. 6)". "மீன் அறுவடை" (தொழில் முன்னேற்றம். டிசம்.

02.ப.18)"அதிகாரத்தை அறுவடை செய்துகொண்டார்கள்" (புதிய ஜனநாயம், ஜன. 03, ப.3) இவற்றில் 'அறுவடை' யானது பயிர்த்தொழிலுக்கு மட்டுமல்லாது மீன், நீர் எனப் பரவலாகப் பயன்படுத்தப்படுவதையும், 'அதிகார அறுவடை' என்பது போல உருவகமாகப் பயன்படுத்தப்படுவதையும் காணமுடிகிறது.

சிற்றிதழ்: இச்சொல்லுக்குத் தமிழ்ப்பேரகராதியில் இரு பொருள்கள் கொடுக்கப் பட்டுள்ளன. அவை, 'மலரின் உள்ளிதழ்,' 'நேர்த்தியான பின்னல்' என்பனவாம். இச்சொல் பிற்காலத்தில், 1992இல் உருவாக்கப்பட்ட க்ரியா அகராதியில் காணப்படவில்லை. ஆனால் இதன் திருத்தப்பட்ட பதிப்பில் (2008) கொடுக்கப்பட்டுள்ளது. அதில், இச்சொல்லுக்கான பொருள், "வணிக நோக்கம் இல்லாமல், புதிய கருத்துகள், போக்குகள், சோதனை முயற்சிகள் கொண்ட படைப்புகளுடன் நடத்தப்படும் குறைந்த எண்ணிக்கையிலான வாசகர்களைச் சென்றடையும் இதழ், சிறுபத்திரிகை (Little Magazine) என்று கொடுக்கப்பட்டுள்ளது. ஆக, சிறுபத்திரிகைக்கு உரிய சொல்லாகச் சிற்றிதழ் பயன்படுத்தப்படுவதை அறியமுடிகிறது. இச்சொல் 2002, 2003களிலே பரவலாகப் பயன்பட்டுவந்துள்ளது. சான்றாக, 26.10.2003இல் வெளியான ஆனந்தவிகடன் இதழில், "சிற்றிதழ்கள் பற்றிப் பேசுகின்ற ஜெயமோகனுக்குச் சிற்றிதழ்களின் வரலாறு தெரியாது". (ப.68) என இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. ஆக, இச்சொல் 1992க்குப் பின்பே இப்புதிய பொருளில் பயன்பட்டிருக்க வேண்டும்.

உள்ளிடு–தல்: இச்சொல் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதியில் இடம்பெற்றுள்ளது. அங்கு இதற்கான பொருள், "உள்ளடக்குதல்; to include, comprise" என்று கொடுக்கப்பட்டுள்ளது. இச்சொல், பிற்காலத்தில் கணினிதுறையில், பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது. அங்கு இச்சொல், "கணினியில் சேமிக்க விரும்பும் தகவல்களை விசைப்பலகையில் தட்டிப்பதிவு செய்தல்". என்னும் புதுப்பொருளை ஏற்று வந்துள்ளதைக் காணமுடிகிறது.

இச்சொற்களைப் போன்று பல பழைய சொற்கள் இன்று புதுப்பொருளுடன் பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. இதன் மூலம், பழைய சொற்களும் சொல்வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கின்றன என்பதை அறியலாம். இவற்றுள், பெயர்ச்சொற்களின் பயன்பாடு பெருமளவு கலைச்சொல்லாக்கத்திலும், வினைச் சொற்களின் பயன்பாடு பெருமளவு பேச்சுவழக்கிலும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

பழைய சொற்களின் பயன்பாட்டில் சிக்கலும், தீர்வும்: கலைச்சொற்களில் பழைய சொற்களைப் பயன்படுத்தும்போது, அப்படியே பழைய சொற்களைப் பயன்படுத்துவது சிக்கலை உண்டாக்கும். சான்றாகச் சட்டம், வணிகம் முதலிய துறைகளில் ஆங்கிலக் கலைச்சொற்கள் மிகுதியாக வரக்கூடும். இவற்றை மொழிபெயர்த்துப் புதிய சொற்களை உருவாக்கும் போதும், பழைய சொற்களுக்குப் புது கருத்தமைவு தரும்போதும் மூல மொழிச் சொற்களை அடைப்புக் குறிக்குள் தராவிட்டால் பொருளைச் சரியாக உணரமுடியாது. சான்றாக, 'மோதல்' என்னும் ஒரு பழைய சொல்லுடன் 'சாவு' என்னும் ஒருசொல் இணைந்து 'மோதல் சாவு' எனும் கூட்டுச் சொல் ஜூனியர் விகடன் இதழில் வெளியாகி உள்ளது. அதனைக் காண்போம்.

"மனித உரிமையை மீறும் மோதல் சாவுகள் ஆந்திராவைக் காட்டிலும் தமிழகத்தில் அதிகமாகிக் கொண்டே வருகிறது". (ஜூ.வி. 08.12.02, ப. 5) இப்படியே படிக்கும் போது 'ஒருவரோடு ஒருவர் சண்டையிடுவதால் உண்டாகும் இறப்பு'. அல்லது பேருந்து முதலிய வாகனங்கள் மோதுவதால் உண்டாகும் 'இறப்பு' என்றெல்லாம் பொருள் குழப்பம் விளைவிக்க வாய்ப்புள்ளது. இதழில் இந்த இருபொருள்களிலுமே இச்சொல் கையாளப் படவில்லை என்பது இச்சொல் அருகே அடைப்புக் குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ள (Encounter) எனும் சொல்வழி அறியமுடிகிறது. எனவே, பழைய சொற்களைப் பயன்படுத்தும்போது, அடைப்புக் குறிக்குள் அச்சொல்லுக்கு இணையான பிறமொழிச்சொல்லைத் தருதல் இச்சிக்கலுக்குத் தீர்வளிக்கும்.

கவனிக்க வேண்டியன – பழைய சொற்கள்:

ஒரு மொழியில் ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள் அமைந்திருப்பது இயல்பு. இவை அனைத்திற்கும் வேறு மொழியில் ஏற்ற சொற்கள் இருக்க வாய்ப்பு இல்லை. இதனால் சரியான பொருளைப் புலப்படுத்த முடியாத நிலை எழுகிறது. இவ்வாறமைந்த சொற்களைத் தமிழில் பெயர்க்கும் போது ஒவ்வொன்றிற்கும் ஏற்ற சொல்லைப் புதிதாக உருவாக்க வேண்டும்.

வழக்கிழந்துவிட்ட பழந்தமிழ்ச் சொற்களைத் தேடவும், புதிய சொற்களை உருவாக்கவும் முயற்சி தேவைப்படுகிறது. ஆனால் சோம்பல் மிக்கவர்கள் இந்த இரண்டு இன்றியமையாப் பணிகளையும் செய்ய விருப்புவதில்லை. அவர்கள் புழக்கத்திலுள்ள பிறமொழிச் சொற்களை அப்படியே எடுத்துக்கொண்டும் கலப்புச் சொற்களை உருவாக்கியும் பயன்படுத்துகின்றனர். இதனால் சொல்லாக்கத்தில் சிக்கல் எழுகிறது. எனவே கலைச்சொல்லாக்குவோர் பழந்தமிழ்ச் சொற்களைக் கருத்தில் கொண்டு செயல்பட வேண்டும்.

எண்ணற்ற புதிய சிந்தனைகளும், கருத்துகளும், கண்டுபிடிப்புகளும் இன்று தோன்றிக்கொண்டே உள்ளன. இவை அனைத்தையும் தமிழில் கொணர, புதிய சொற்களை உருவாக்க, பெருமளவு முயற்சி தேவை. ஆனால் இவற்றுக்கு இணையான பொருத்தமான சொற்கள் ஏற்கெனவே தமிழில் இருப்பின், அவற்றையே பயன்படுத்திக் கொள்ளலாம். இதனால் நேரமும் உழைப்பும் மிச்சமாகும். எனவே கலைச்சொல்லாக்கத்தில் பழைய சொற்கள் பங்கு அளப்பரியது.

துணை நின்ற நூல்கள்:


- தமிழில் புதிய சொற்கள், ந. ஆனந்தி, மங்கை வெளியீடு, சென்னை–18, பதிப்பு:2018.
- க்ரியாவின் தற்காலத் தமிழ்ப் பேரகராதி, க்ரியா, 1992.
- க்ரியாவின் தற்காலத் தமிழ்ப் பேரகராதி, திருத்திய பதிப்பு, க்ரியா, 2008.
- Tamil Lexicon, University of Madras, 1982.
- சீவக சிந்தாமணி மூலமும் உரையும், திருத்தக்கதேவர்; உரையாசிரியர்கள்: புலவர் அரசு, பொ. வே. சோமசுந்தரனார், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1959.
- இராம சுந்தரம், பொருள் புதிது வளம் புதிது, வசந்தம், தஞ்சாவூர், 1999.

# TAMIL LINGUISTICS INTO THE THIRD MILLENNIUM

R.E. ASHER

சென்ற இதழின் தொடர்ச்சி

a modest part in the literature of the last two decades devoted to linguistic typology and the universals of language. Typology, which has its basis in the fact that the surface structures of languages may differ in many ways at all levels – phonology, morphology, syntax, semanticsand the search for universals, which is concerned with what all languages share, may seem superficially to be in opposition. Yet the study of the two is, for good reason, intimately linked in modern studies. Caldwell, however, has little to say by way of what could be considered to be a statement about language universals. His question, when discussing issues that fall into this context, has to do with what conclusion is to be drawn from the sort of typological similarities he has observed. It would be a worthwhile excercise to examine all the languages that he cites in such discussions and they are by no means few in number – to see how similar in fact they are.

Caldwell urges caution in such comparisons, an approach which obviously merits strong support, though not only for the reasons that one can find explicitly stated by him. A special reason for caution is that, no matter how many structural analogies one can find between a pair of languages, this is in itself no reason for assuming them to be genetically related. The only firm basis for such an assumption still lies in the discovery of systematic correspondences at the phonological level, with a substantial set of vocabulary items to support the thesis.

That there are several languages that share many grammatical features with Tamil is undeniable. While some scholars have found such features to indicate a possible genetic relationship, others have remained unconvinced. What is certain is that the similarities do call for an explanation other than that of mere chance. Such an explanation should be sought in theories of universals, some of them absolutes and some of them strong tendencies.

Some of the most striking similarities that link Tamil and languages whose speakers do not live in contiguous regions are syntactic. However, a large proportion of the languages that share these characteristics with Tamil are, like Tamil, predominantly agglutinating in terms of the best known model of a morphological typology. The usefulness of this model, with its three manifestations of isolating, called into question on the grounds that | la perny

few languages provide an absolutely 'pure' example of any of these types. It can, nevertheless, provide a convenient method of indicating where some languages, at least, stand on the two indices of synthesis and fusion. It would be legitimate to ask whether agglutination as a morphological feature correlates with the syntactic characteristics exhibited by Tamil and the other languages under discussion here.

Since members of the same language family do not necessarily share the same overall syntactic typology, it would be a valuable study to investigate in more detail that has hitherto been done the extent to which the same statements can be made about different Dravidian languages. So far we have tended to be satisfied with such statements as, 'Dravidian languages are typically SOV'. Something more subtle and far reaching is wanted. We can expect that a comparison of Tamil and Malayalam would show them to be closely similar. But what of Tamil and Toda, or Malayalam and Malto?

So far, however, more interest has been shown in parallels to be found between Tamil and non–Dravidian languages. Tamil and Japanese are quite remarkable similar, starting with the same basic SOV order of major constituents in a sentence. This can be summarised as follows (see Asher 1996):

1. Both are basically SOV.
2. Modifier precedes noun.
3. Genitive precedes noun.
4. Complex modifiers such as relative clauses (as noted by Caldwell) precede nouns, and in such cases the dependency relationship that holds between the verb form in the relative clause and the head noun is indicated neither by the order of constituents nor by any grammatical feature on the head noun, which takes its case marker from its function in the main clause.
5. Both languages use postpositions, not prepositions.
6. Comparative adjectives are preceded by the standard of comparison.
7. Conjunctions in temporal clauses occupy clause–final position.
8. The strategies for reporting speech are very similar.
9. Passive constructions are similar.
10. Causative constructions are very similar.
11. Noun phrases that can readily be recovered from the context are freely deleted in both languages.
12. There is an interrogative that occurs in sentence–final position.
13. The pattern for and–coordination of nouns is very similar.

There are other details. Both languages have a set of prefixes for demonstratives which are repeated over several word classes and subsets thereof. There is the same combination of a coordinating particle (–um in Tamil, mo in Japanese) with interrogative words to generate words expressing universality (i.e., the translation equivalents of always, everyone, etc.) What is sometimes seen as a remarkable feature of Tamil, namely what has been called 'indirect relativisation', is also paralleled in Japanese. By 'indirect relativisation' is meant such constructions as aval pampu partta payam 'her fear at seeing the snake', or va ti varukira cattam 'the noise of the vehicle approaching', where there is no possibility of deriving the relative clause from one single embedded sentence, because there is no functional relationship between partta and payam, or between varukira and cattam. Both languages also have frequent occurrence of the affective reduplicated structures referred to earlier. Almost identical statements could be made if the two languages discussed were Malayalam and Japanese, with the additional fact that neither of these languages exhibits concord between noun/ pronoun subject and finite verb.

Turkish, perhaps more typically agglutinating even than Tamil, produces a similar set of parallels (see Asher 1997): the same. 'The basic order of morphemes in both nouns and verbs is Noun phrases are similarly composed, with modifiers (including relative constructions) and genitives preceding the noun. Adverbial modifiers precede adjectives... Adpositions are of the postpositional type. At the sentence level, subordinate clauses precede

the main clause, with subordinating conjunctions being clause–final, and the basic order of major constituents is SOV. The Turkish interrogative suffix {–mi} closely resembles Tamil –a (more so, in fact, than Japanese ka.)'

The same can be said, and to a similar extent, of a language that has never been proposed as a candidate for kinship with Tamil, namely Haddiya, an East Cushitic language spoken in central Ethiopia (for more detail, see Asher 1997).

A more detailed study of Tamil and any of these languages seems likely to provide further significant data. For one such language, such a careful study was attempted, though this was not in recent times. A hundred years ago Homer B. Hulbert published a ten–page article on the Origin of the Korean people' (Hulbert 1895). Having put the question, 'Now where did the language of Southern Korea come from?', he lists fourteen points of similarity between Korean and the Dravidian languages:

(1) That the vowels used in both are identical and that in each there is a continual use of soft e, o and a not common in the Tartar branch of that family: that the letters l, r, d are interchangeable in both: both reject the vocalized aspirates z and v: both reject double consonants at the beginning of syllables: in both, t and s are often interchanged: in both the laws of nasalization are the same.

(2) Both the Korean and the Dravidian languages have different verbs to denote the two meanings of the verb "to be", one denoting existence, and the other used simply as the copula. They each also have separate verbs of affirmation and negation.

(3) As for cases – what Caldwell says of the Dravidian applies perfectly to Korean, namely "Every postposition annexed to a noun constitutes properly speaking a new case, and therefore the number of cases depends upon the requirements of the speaker and the shades of meaning which he wishes to express"

(4) In neither is gender expressed by inflection. In both, the adjective is destitute of comparison. In both, the numerals, at least in part, have two forms, one substantive and the other adjective.

(5) In both the order of the sentence is the same–subject, object, predicate, each being preceded by all its modifiers, but in each the complex modifiers of the verb come before everything else. Both make use of continuative particles instead of conjunctions. In both the relative pronoun is lacking but the adjective participle is used instead. In both, the remoteness or proximity of pronouns is very prominent.

(6) In both, the verb stems are commonly monosyllabic and the crude root is used commonly has an imperative. When a "helping vowel" is needed the same one is used in both.

(7) In both we find nouns of relation which correspond to prepositions in English. In both there is the same use of formative particles to denote different aspects in which an action can be viewed.

(8) ... In both, plurality is expressed by a separate particle of pluralization and the singular is often marked by the use of the numeral one. ...

(9) In both languages the instrumental case is sometimes formed by the use of the participle of the verb "to take." In both languages there is what we may call a conjunctive case. In Korean its sign is oa or goa; in Dravidian it is otu or to.

(10) The Korean and Dravidian languages are both lacking in personal pronominal suffixes. ...

(11) The Korean and Dravidian tongues both form adjectives very commonly by appending to the noun the adjective participle of the verb "to become".

(12) In the comparison of adjectives we find another striking similarity.

their various aspects, change at a constant rate, we do know, from the history of language families for which clear evidence over a long period is available, that neither phonetic systems nor grammatical structures are necessarily stable over millennia or even centuries. They, like vocabularies, do shift and change.

The close phonetic similarities in the rather random set of comparative vocabulary presented by Hulbert are therefore more safely regarded as suspicious than as convincing (even apart from the fact that there is no demonstration of systematic correspondences). In view of the time span that he insists on, greater differences might have been expected. We know, too, that languages do change typologically over time. Yet the structural parallels exhibited by Korean and Tamil – and matched in other languages such as Haddiya, Japanese and Turkish–do require an explanation. One can certainly agree with Hulbert that mere coincidence is inadequate to explain these marked similarities. If genetic relationship (which is not to be automatically rejected as impossible; it simply requires proof on the basis of sound criteria and methodology, and this has not yet been provided) is excluded, then there is only one explanation left for serious consideration. This is that one syntactic structural feature has a strong tendency to entail another. The facts alluded to and discussed above tend to sustain the notion that it is a probable universal tendency of human language that a range of structural features comes in a package. Work in the field of typology over the past two decades has already demonstrated this. More detailed comparison of Tamil with a range of other languages seems likely to provide even stronger support for the theory.

In looking thus at a range of topics in Tamil language and in Dravidian linguistics on which we still lack knowledge, I have aimed to suggest that there is still much existing and important work to do. To return to my opening theme of the way in which the eight IATR conferences that have been staged so far have done much to stimulate the type of work that is needed, let us hope that the series will continue through the next century so that, among other things, the fascination and importance of Tamil and Dravidian – the fourth largest language family in the world – will gain increasing recognition as a rewarding subject of study.

## BIBLIOGRAPHY


Annamalai, E. et al. 1992. Kriyavin tarkalat tamil akarati: tamil – tamil – ankilam. Madras: Cre–A.

Arden, A.H. 1891. A Progressive Grammar of the Tamil Language. Madras & London: Society for the Propagation of Christian Knowledge. 5th edn, revised by A.C. Clayton, Madras, The Christian Literature Society, 1942.

Asher, R.E. 1968.250 years after: some features of Ziegenbalg's study of Tamil. In Xavier S.Thani Nayagam (ed.), Proceedings of the First International Conference of Tamil Studies, Kuala Lumpur – 1966, Kuala Lumpur: IATR, Vol.II: 523–533.

Asher, R.E. 1996. Japanese and Tamil: some typological analogies. Asian Cultural Studies 22: 109–20.

Asher, R.E. 1997. Tamil and Typology. In R. Nagaswamy (ed.) Studies in South Indian History and Culture: Prof. V.R. Ramachandra Dikshitar Centenary Volume, Chennai: V.R. Ramachandra Dikshitar Centenary Committee; 241–248.

Britto, Francis. 1986. Diglossia: a Study of the Theory with Application to Tamil. Washington, DC: Georgetown University Press.

Caldwell, R. 1856. A Comparative Grammar of the Dravidian or SouthIndian Family of Languages. London: Harrison; 2nd edn London, Trubner, 1875; 3rd edn revised by J.L. Wyatt and T. Ramakrishna Pillai, London, Kegan Paul, 1913.

Calyton, A.C. 1926. An Introduction to Spoken Tamil. Madras: Christian Literature Society for India.

Emeneau, M.B. 1969. Onomatopoetics in the Indian liguistic area. Language 45:274–299,

Emeneau, M.B. 1980. Language and Linguistic Area. Stanford, CA: Stanford University Press.

Emeneau, M.B. 1984. Toda Grammar and Texts. Philadelphia: American Philosophical Society.

Ferguson, Charles A. 1959. Diglossia. Word 15: 325–340.

Hulbert, Homer B. 1895. Origin of the Korean People, II. The Korean Repository 4.

Hulbert, Homer B. 1905. A Comparative Grammar of the Korean Language and the Dravidian Languages of India. Seoul: Press of the Methodist Printing House..

Leech, Geoffrey and Jan Svartvik. 1975. A Communicative Grammar of English. London & New York: Longman.

Masica, Colin P.1976. Defining a Linguistic Area: South Asia. Chicago and London: Chicago University Press.

Meenakshisundaram, T.P. 1965. A History of the Tamil Language. Poona: Deccan College Post–graduate and Research Institute.

Quirk, Randolph, Sidney Greenbaum, Geoffrey Leech and Jan Svartvik. 1985. A Comprehensive Grammar of the English Language. London: Longman.

Rajam, V.S. 1992. A Reference Grammar of Classical Tamil Poetry (150 B.C.–pre–fifth/sixth century A.D.). Philadelphia: American Philosophical Society.

Schiffman, Harold F.1999. A Reference Grammar of Spoken Tamil. Cambridge: Cambridge University Press.

Steever, Sanford B. 1987. Tamil and the Dravidian languages. In Bernard Comrie (ed), The World's Major Languages, London & Sydney, Croom Helm: 725–746.

Ziegenbalg, Bartholomaeus. 1716. Grammatica Damulica ... Halae Saxonum: Litteris & impensis Orphanotrophei.

Zvelebil, Kamil V.1959a. Dialects of Tamil I. Archiv Orientalni 27: 272



நன்றி: CONTRIBUTION OF TAMIL CULTURE TO THE TWENTY FIRST CENTURY
PROCEEDINGS OF THE Eighth INTERNATIONAL CONFERENCE-SEMINAR OF TAMIL STUDIES
Tamil Nadu_India
VOLUME ONE
INTERNATIONAL ASSOCIATION OF TAMIL RESEARCH

# தமிழ் அகராதியியல்நாள் விழா –2022
# விருதுகள் மற்றும் பரிசுகள் !

**விண்ணப்பிக்கக் கடைசிநாள் : 30.07.2022**

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், "மொழிஞாயிறு" தேவநேயப் பாவாணர் அவர்களின் அகராதியியல் நெறிப்படி, மொழிக் காப்புக் கருவூலங்களான அகராதிகளை உருவாக்கிவருவதோடு, காலத்தின் தேவையான தமிழ்க் கலைச்சொல்லாக்கப் பணியையும் தொடர்ந்து செய்துவருகிறது. இப்பணிக்குத் துணைநிற்கும் வகையில் செயலாற்றிவரும் அகராதியியல் அறிஞர்கள், கலைச்சொல்லாக்க வல்லுநர்கள், நற்றமிழ் பரப்பும் ஊடகத் துறையினர், பைந்தமிழ் காக்கும் பாவலர்கள் உள்ளிட்டோரை ஊக்குவிக்கும் வகையில், தமிழ்நாடு அரசால் "தூயதமிழ் ஊடக விருது", " நற்றமிழ்ப் பாவலர் விருது", "தூயதமிழ்ப் பற்றாளர் விருது" ஆகிய விருதுகளும், தூயதமிழில் பேசுவோருக்கான பரிசு, பள்ளி மாணவர்களுக்குரிய கலைச்சொல்லாக்கம் (ம) சொல் – பொருள் – ஓவியப் போட்டிக்கான பரிசு ஆகியவையும் வீரமாமுனிவரின் பிறந்தநாளான நவம்பர் 8ஆம் நாள் கொண்டாடப்படும் "தமிழ் அகராதியியல் நாள் விழா"வில் வழங்கப்பட்டுவருகின்றன.

| | | |
|---|---|---|
| தூயதமிழ் ஊடக விருது | – | அச்சு ஊடகம், காட்சி ஊடகத்திற்கு ஒவ்வொன்றிற்கும் உருபா. 50ஆயிரம் பரிசுத்தொகை, தங்கப்பதக்கம், தகுதியுரை |
| நற்றமிழ்ப் பாவலர் விருது | – | மரபுக் கவிஞர், புதுக்கவிஞர் ஒவ்வொருவருக்கும் உருபா. 50ஆயிரம் பரிசுத்தொகை, தங்கப்பதக்கம், தகுதியுரை |
| தூயதமிழ்ப் பற்றாளர் விருது | – | மாவட்டந்தோறும் ஒருவருக்கு உருபா. 20ஆயிரம் பரிசுத்தொகை, சான்றிதழ் |
| தூயதமிழில் பேசுவோருக்குப் பரிசு | – | மாநில அளவில் மூவர் தேர்வுசெய்யப்பெற்று, ஒவ்வொருவருக்கும் உருபா 5ஆயிரம் பரிசுத்தொகை, சான்றிதழ் |

மாணவர்களுக்கான கலைச்சொல்லாக்கம் (ம) சொல் – பொருள் – ஓவியப் போட்டி – ஒவ்வொரு போட்டியிலும் சான்றிதழுடன் முதற்பரிசு உருபா 10ஆயிரம் பரிசுத்தொகை, இரண்டாம் பரிசு உருபா 5ஆயிரம் பரிசுத்தொகை

அந்தவகையில் 2022ஆம் ஆண்டுக்கான தமிழ் அகராதியியல் நாள் விழா விருதுகளுக்கான விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன. தகுதிவாய்ந்தோர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை.காம் (www.sorkuvai.com) வலைத்தளத்திலுள்ள அந்தந்த விருதுக்கான விண்ணப்பப் படிவத்தைப் பதிவிறக்கம் செய்து நிரப்பி, 31/07/2022க்குள் இவ்வியக்ககத்திற்குக் கிடைக்குமாறு, "இயக்குநர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், நகர் நிருவாக அலுவலகக் கட்டடம், முதல்தளம் எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை–600 028" என்ற முகவரிக்கு நேரிலோ அல்லது அஞ்சல் வழியாகவோ அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

இயக்குநர்

தமிழ்நாடு அரசு

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028

☎ : 044 - 29520509 ✉ : oodagavirudu@gmail.com

# தூயதமிழ் ஊடக விருது - 2022

தூயதமிழ்ச் சொற்களையும், காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் பயன்படுத்தி செய்திகளையும், நிகழ்ச்சிகளையும் வழங்கும் காட்சி, அச்சு ஊடகங்களிலிருந்து முறையே ஒவ்வொன்றைத் தேர்வு செய்து **'தூயதமிழ் ஊடக விருதும்'** உருபா.50,000/- பரிசுத் தொகையும், தங்கப்பதக்கத்தோடு தகுதியுரைச் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்த ஊடகத்தார் சொற்குவை.காம் (sorkuvai.com) என்ற வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, தங்கள் ஊடகம் தூய தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்துவதனை உறுதிசெய்யும் சான்றுகளோடு இணைத்து வருகிற 31.07.2022ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

தமிழ்நாடு அரசு

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028

☎ : 044 - 29520509 ✉ : paavalarvirudu@gmail.com

# நற்றமிழ்ப் பாவலர் விருது - 2022

பிறமொழிக் கலப்பில்லாமல் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி, தம் கவிதைப் படைப்புகளை உருவாக்கும் மரபுக்கவிஞர், புதுக்கவிஞர்களிலிருந்து முறையே ஒவ்வொருவரைத் தேர்வு செய்து **'நற்றமிழ்ப் பாவலர் விருதும்' உருபா 50,000/-** பரிசுத் தொகையும், தங்கப்பதக்கத்தோடு பாராட்டுச் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்த பாவலர்கள் சொற்குவை.காம் (sorkuvai.com) என்ற வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி 31.07.2022 ஆம் நாள் மாலை 5.00மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும். தம் கவிதைப் படைப்புகளில் தூயதமிழ்ச்சொற்களே பயன்படுத்தப்படுகின்றன என்பதை உறுதிசெய்யும் சான்றுகளாகத் தம் கவிதை நூல்களையும் இணைத்து அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

தமிழ்நாடு அரசு

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028

: 044 - 29520509 : patralarvirudhu@gmail.com

# தூயதமிழ்ப் பற்றாளர் விருது - 2022

நடைமுறை வாழ்க்கையில் தூயதமிழிலேயே பேசுகின்ற தகுதி வாய்ந்தவர்களிலிருந்து மாவட்டத்திற்கு ஒருவரைத் தேர்வு செய்து **'தூய தமிழ்ப் பற்றாளர் விருதும்'** உருபா 20,000/- பரிசுத் தொகையும் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதிவாய்ந்த தமிழறிஞர்கள் சொற்குவை.காம். (sorkuvai.com.) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து நிரப்பி 31.07.2022ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும். விண்ணப்பிப்போர் தமிழறிஞர்கள், அரசு அலுவலர்கள் (அ) பேராசிரியர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிப்போரின் ஒருபக்க அளவிலான தன்விவரக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் (Photo) இணைக்க வேண்டும்.

குறிப்பு : விண்ணப்பிப்போர் தற்போது வாழும் மாவட்டத்தைக் குறிப்பிட்டுதான் விண்ணப்பிக்க வேண்டும். கடைசி நாள் (31.07.2022) முடிந்ததும், விண்ணப்பிப்போரின் தமிழ்ப்பற்றை ஆராயும் வகையில் எந்த நாளில் வேண்டுமானாலும் முன்னறிவிப்பின்றி அலைபேசிவழி நேர்காணல் நடத்தப் பெறும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர்

தமிழ்நாடு அரசு

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028

: 044 - 29520509 : patralarparisu@gmail.com

# தூயதமிழ் பேசுவோருக்குப் பரிசு

நடைமுறை வாழ்க்கையிலும் தூய தமிழிலேயே பேசுகின்ற தகுதி வாய்ந்த 3 தனித்தமிழ்ப் பற்றாளர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ.5,000/-பரிசுத் தொகையும் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்தவர்கள் சொற்குவை.காம் (Sorkuvai.com) என்ற வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி இவ்வியக்கக முகவரிக்கு 31.07.2022 ஆம் நாளுக்குள் அனுப்ப வேண்டும். விண்ணப்பிப்போர் நாடறிந்த தமிழறிஞர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிக்கும் தமிழறிஞர்களின் ஒருபக்க அளவிலான தன் விளக்கக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் இணைக்க வேண்டும்.

குறிப்பு : கடைசி நாள் (31.07.2022) முடிந்ததும், விண்ணப்பிப்போரின் தமிழ்ப்பற்றை ஆராயும் வகையில் எந்த நாளில் வேண்டுமானாலும் முன்னறிவிப்பின்றி அலைபேசி வழி நேர்காணல் நடத்தப் பெறும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர்

தமிழ்நாடு அரசு

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028

: 044 - 29520509 : agarathimalar2020@gmail.com

## தமிழ் அகராதியியல்நாள் விழா - 2022
## ஆய்வு மலருக்குக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன !

**பொருண்மைகள்:**

1. அறிவியல் தொழில்நுட்பத்தில் தமிழ்க் கலைச்சொற்கள் 2. கணினிக் கலைச்சொல்லாக்கம் 3. மொழிக்காப்பும் வட்டார வழக்கும் 4. சொல்லாக்கமும் வட்டாரவழக்கும் 5.சொல்லாக்க நெறிமுறைகள் 6. பிறமொழிகளில் தமிழ்ச்சொற்கள் 7. சொற்பிறப்பியல் அகராதிகள் 8. மருத்துவத் துறையில் கலைச்சொற்கள் 9. ஊடகத்துறையில் தமிழ்க் கலைச்சொற்கள் 10. திரைப்படங்களில் இனிய வழக்குச்சொற்கள் 11. புலம்பெயர்த் தமிழர்களின் தமிழுணர்வு - தமிழ்ப்பற்று - தமிழ்ச்சொல்லாக்கம் 12. புலம்பெயர்த் தமிழர்களின் கலைச்சொல்லாக்கப் பங்களிப்பு 13.அண்மை புதினங்களில் வட்டார வழக்குச் சொற்கள் ஆகிய தலைப்புகளில் கட்டுரைகளைக் கணினித் தட்டச்சு செய்து மேற்கண்ட இயக்கக மின்னஞ்சலுக்கு 31.07.2022-ஆம் மாலை 5மணிக்குள் அனுப்ப வேண்டும். கட்டுரையினை ஏ4 அளவில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் ஒருங்குறி (யுனிக்கோடு) எழுத்துருவில், எழுத்தளவு11.வரி இடைவெளி 1.5-இல், சொற்செயலிக்கோப்பாக (Word Docoment file) அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம். தேர்வுக்குழுவால் ஏற்பளிக்கப்படும் கட்டுரைகள் மட்டுமே மலரில் இடம்பெறும். முகவரி, தொலைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, ஒளிப்படம், தன்விளக்கக் குறிப்பு ஆகியவை கட்டாயம் கட்டுரையுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

# மாற்றப்பட்ட ஊர்ப்பெயர்கள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீரங்கம் | – | திருவரங்கம் |
| நாமக்கல் | – | ஆரைக்கல் |
| நீலகிரி | – | நீலமலை |
| இராமநாதபுரம் | – | முகவை |
| கபிஸ்தலம் | – | குரங்காடுதுறை |
| வேதாரண்யம் | – | திருமறைக்காடு |
| ஸ்ரீமுஷ்ணம் | – | திருமுட்டம் |
| சுவாமிமலை | – | திருவேரகம் |
| பரமக்குடி | – | பறம்புக்குடி |
| உதகமண்டலம் | – | ஒற்றைக்கல்மன்று |
| செங்கற்பட்டு | – | செங்கழுநீர்ப்பட்டு |
| வைத்தீஸ்வரன் கோவில் | – | புள்ளிருக்கு வேலூர் |
| மைசூர் (மகிஷீர்) | – | எருமையூர் |

# தமிழ்நாடு அரசு, அகரமுதலி திட்ட இயக்ககம்
## மற்றும்
# எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை
## இணைந்து நடத்திய
# துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம்





தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை இணைந்து நடத்திய துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம் (15.06.2022) நடைபெற்றது. கூட்டத்தில் முனைவர் சி.பாலசுப்பிரமணியன் அவர்கள் தலைமை வகிக்க, துணை இயக்குநர் திரு.ச.லோகநாதன் அவர்கள் முன்னிலை வகித்தார். உதவி இயக்குநர் திருமதி கே.சி. லதா வாழ்த்துரை வழங்க, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சிறப்புரையாற்றினார். நிகழ்வில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா.பூங்குன்றன், முனைவர் தி.பாலசுப்பிரமணியன், தொகுப்பாளர் வே.பிரபு ஆகியோர் கலந்து கொண்டனர். நிகழ்வின் நிறைவாக உதவி இயக்குநர் எம்.கே. சீனிவாசன் நன்றியுரையாற்றினார்

# தமிழ்க் கலைக்கழகத்தின் 111ஆவது கூட்டம்




21.06.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 111ஆவது கூட்டத்தில் 242 தமிழ்க் கலைச்சொற்களுககு வல்லுநர்குழு ஏற்பளித்தது. கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை (ம) அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 112ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் தமிழ்க் கலைக்கழகத்தின் 112ஆவது கூட்டம் 28.06.2022ஆம் நாள் நடைபெற்றது. அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தமிழ்க் கலைக்கழக அலுவல்சார் உறுப்பினர்கள் முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு.ஆல்துரை, புலவர் வெற்றியழகன், திரு.அ.மதிவாணன், திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோருடன், கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு, அலுவல்சார் உறுப்பினர்கள், இயக்கக அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 141 தமிழ்க் கலைச்சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்தது. கூட்டத்தில், Drone Technician என்ற ஆங்கிலச் சொல்லுக்குச் "சுரும்பூர்தி வல்லுநர்" என்ற கலைச்சொல்லாக்கம் செய்யப்பட்டதற்கு வல்லுநர்குழு ஏற்பளித்தது. சுரும்பு என்றால் வண்டு என்று பொருள். Helicopter என்பதற்கு "உலங்கூர்தி" என்று கலைச்சொல்லாக்கம் இருப்பதன் அடிப்படையிலும், Drone எனும் கருவியானது வண்டு பறக்கும்போது எழும் ஒருவித ஓசைபோன்ற ஒலியுடன் பறப்பதைக் காரணமாகக் கொண்டும் Drone என்ற ஆங்கிலச் சொல்லுக்குச் "சுரும்பூர்தி" என்ற கலைச்சொல்லாக்கம் செய்யப்பட்டது குறிப்பிடத்தக்கது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 113–ஆவது கூட்டம்





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 12.07.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 113ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், மலேசியா ஈப்போ முத்தமிழ்ப் பாவலர் மன்றத்தின் தலைவர் முனைவர் அருள் ஆறுமுகம் கண்ணன் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ.மதிவாணன், ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு, ஆல்ஃபா கலைக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் க.சங்கர், மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 203 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது. ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | | |
|---|---|---|
| 1.Power trip | – | மின்திறன் குறைவு |
| 2.Predators of knowledge | – | அறிவுக் கள்வர் |
| 3.Rake–off | – | ஈட்டுப்பங்கு |
| 4.Rexine | – | செயற்கைத் தோல் |
| 5.Robust posture | – | வலிமைப் பொலிவு |
| 6.Self affidavit | – | தன் உறுதி ஆவணம் |
| 7.Simulation game | – | போலாட்டு விளையாட்டு |
| 8.Sniper | – | துமுக்கி வீரர் |
| 9.Takeaway food | – | எடுப்புணவு |
| 10.Urban cruiser | – | மகிழ்வுலாக் கலம் |
| 11.Water biscuit | – | இனிப்பிலா மாச்சில் |
| 12.Whip–smart | – | நுண்ணறிவர் |
| 13.Zenventure | – | துணிவு முயற்சி |

### தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை

# அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கரா கலை மற்றும் அறிவியல் கல்லூரி

### இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022









தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கரா கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022 நிகழ்வு 08.07.2022 ஆம் நாள் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் தமிழ்த்துறை தலைவர் முனைவர் ஜெ.இராதாகிருஷ்ணன் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் கலை இராம. வெங்கடேசன் தலைமை வகிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரை மற்றும் சொற்குவை அறிமுக உரையும் வழங்கினார். நிகழ்வில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே.பிரபு நன்றியுரை கூறினார். நிகழ்வில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா.பூங்குன்றன், முனைவர் தி.பாலசுப்பிரமணியன் ஆகியோர் கொண்டு மாணவர்களுக்கு சொற்குவைப் பற்றி பயிற்சி வழங்கினார்கள்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழிவளர்ச்சியில் மொழிபெயர்ப்பின் பங்கு அளப்பரியது. மொழிபெயர்ப்பானது பொருத்தமுடனும் உயிர்ப்புடனும் அமைய கலைச்சொற்கள் இன்றியமையாத் தேவையாகின்றன. இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் நெறிப்படுத்தலில், 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 37–41 வரையிலான அமர்வுகள் 2022 சூன் 10, 17, 24, சூலை 01, 08 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களும் மேற்கொண்டனர்.

## 10.06.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. இரா. திருமாவளவன்**
துணைத் தலைவர்,
கலைச்சொல்லாக்கக் குழு,
மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,
மலேசியா



**முனைவர் முருகு தயாநிதி**
முதுநிலை விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
தேசிய கல்வி நிறுவகம், இலங்கை



**திரு. செ. பன்னீர்செல்வம்**
தலைவர், உலகத் தமிழ் நாற்றங்கால்,
மதுரை



## 17.06.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. குயின்ரஸ் துரைசிங்கம்**
எழுத்தாளர், ஆய்வாளர், கனடா



**முனைவர் ஜனனி தேவானந்த்**
முதுநிலை விரிவுரையாளர்,
தகவல் தொழில்நுட்பத்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
இலங்கை



**திரு. வி. இ. குகநாதன்**
எழுத்தாளர், இங்கிலாந்து



**பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
தலைவர், தமிழ் மீட்சிப் பாசறை,
போரூர்



**திரு. ம.மு. ரெங்கசாமி**
திரைப்பட ஒளிப்பதிவாளர்,
ஆவணப்பட இயக்குநர்,
சென்னை.



## 24.06.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. தா. இராசலு பிதா**
தடகளப் பயிற்சியாளர்,
மட்டைப்பந்தாட்ட நடுவர்,
பிரான்சு



**திரு. இறை. மதியழகன்**
மேனாள் தலைவர் (ம) மதியுரைஞர்,
கவிமாலை, சிங்கப்பூர்



**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு



**முனைவர் சி. மகேசுவரன்**
மேனாள் இயக்குநர்,
பழங்குடியினர் ஆய்வு நடுவம்,
தமிழ்நாடு அரசு



**முனைவர் சு. சந்திரசேகரன்**
மேனாள் பேராசிரியர்,
கணினிப் பொறியியல் (ம)
தமிழ்மொழி, வடவள்ளி,
கோயம்புத்தூர்



## 01.07.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திருமதி றொபேட்கெனடி சிவனேஸ்வரி**
மாநகர ஏதிலிகள் சங்க மதியுரைஞர்,
டென்மார்க்



**திரு. பாலசுப்பிரமணியம் துவாரகன்**
பொறுப்பு அலுவலர்,
யாழ்ப்பாண மருத்துவ அருங்காட்சியகம்
தொலை மருத்துவப் பிரிவு,
இலங்கை



**திருமதி தமிழரசி சிவா**
எழுத்தாளர்,
இலண்டன் ஒருங்கிணைந்த அரசகம்.



**பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
தலைவர், தமிழ் மீட்சிப் பாசறை,
போரூர்



**முனைவர் அ. இலட்சுமி தத்தை**
உதவிப் பேராசிரியர்,
புதுச்சேரி பல்கலைக்கழகச்
சமுதாயக் கல்லூரி,
புதுச்சேரி.போரூர்



## 08.07.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் றிச்சேட் அன்ரனி**
தடகளப் பயிற்சியாளர்,
மட்டைப்பந்தாட்ட நடுவர்,
பிரான்சு



**திருமதி ம.ந. புஷ்பா**
மேனாள் கல்வி அலுவலர்,
அரசு அருங்காட்சியகம்,
சென்னை



**திரு. மு. நந்தகுமார்**
முதுநிலை விரிவுரையாளர்,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
இலங்கை



**முனைவர் அ.போ. இருங்கோவேள்**

பேராசிரியர் – மருத்துவ சமூகவியல்
மற்றும் தமிழ் இலக்கியம்,
சங்கர நேத்ராலயா,
சென்னை.



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

திரு. இரா. திருமாவளவன்

Feather Duster – தூசிறகி
Smoke Alarm – புகையலறி
Allen key – வளைத்திறவி

முனைவர் முருகு தயாநிதி

Brain Storming – கருத்துப்பொழிவு
Blended Learning – கலவைக் கற்றல்
Outcome – விளைவு, முடிவு, பேறு, வருகை

திரு. செ. பன்னீர்செல்வம்

Blending – இயந்திருப்பம்
Chance Similarities – நேர்வக் கூறொப்பு
Analogical Levelling – ஒப்பீட்டுப் படிநிலை

முனைவர் ஜனனி தேவானந்த்

Barcode reader – வரிக்கோடு வாசிப்பான்
Database Management – தரவுத்தள முகாமைத்துவம்
Declaration – தனிச்சிறப்பு அறிவித்தல்

திரு. வி. இ. குகநாதன்

Homeless – வீடிலி
Black budget – கரும் பாதீடு
Franchise – இசைவுரிமம்

பாவலர் மறத்தமிழ் வேந்தன்

Catering Service – சமைத்தோம்பல்
Pendrive – ஈர்த்தளிப்பான்
Plastic can – குழைமக் குடுவை

திரு. ம.மு. ரெங்கசாமி

Key Light – முதன்மை விளக்கு
Light Cutter – ஒளித்தடுப்பான்
Bounce Light – எதிரொளி விளக்கு

திரு. தா. இராசலு பிதா

Sprint Run – அதிவிரைவோட்டம்
Half Time – பகுதி ஆட்ட ஓய்வு
Fault Start – தொடக்கப்பிழை

திரு. இறை. மதியழகன்

Condominium – கூட்டுரிமை வீடு
Gondola – தொங்கு பணிமேடை
Void Deck – வெற்றுத்தளம்

திரு. த. சுதாகரன்

Personal law – ஆள்சார் சட்டம்
Property law – பொருள்சார் சட்டம்
Savings – தேடிய தேட்டம்

முனைவர் சி. மகேசுவரன்

Endonym – அகப்பெயர்
Ethnoarchaeology – இனக்குழுசார் தொல்லியல்
Indigenous people – திணைசார் குடிகள்

முனைவர் சு. சந்திரசேகரன்

Testability – ஆய்வுறு திறன்
Susceptability – பயன்வளை திறன்
Composability – ஒருங்குடைதிறன்

திருமதி றெபேட்கெனடி சிவனேஸ்வரி

Social Phobia – குமுகாய அச்சம்
Greenhouse Plants – பைங்குடில் பயிர்
Warm environment – அரவணைப்புச் சூழல்

திரு. பாலசுப்பிரமணியம் துவாரகன்

No Fire Zone – பாதுகாப்பு வலயம்
Underwater Diving Forces – நீரடி நீச்சற் பிரிவு
Forced Disappearance – வலிந்து காணாமல் ஆக்குதல்

திருமதி தமிழரசி சிவா

Bikini – ஈரணி
Caravan – தாமனை
Day care – நாட்புரத்தல்

முனைவர் அ. இலட்சுமி தத்தை

Military Tent – பாடிவீடு
Stream wash – வெள்ளாவி வெளுப்பு
Grinder – மின்னுரல்

முனைவர் றிச்சேட் அன்ரனி

Epithets – அடைமொழிகள்
Personification – உருவகஅணி
Tautology – கூறியது கூறல்

திரு. மு. நந்தகுமார்

Unitary system – ஒற்றையாட்சி முறைமை
Federal system – கூட்டாட்சி முறைமை
Confederal system – கூட்டிணைப்பாட்சி முறைமை

திருமதி ம.ந. புஷ்பா

In–situ Conservation – கள இடத்தில் பாதுகாப்பு
Ex–situ Conservation– வெளி இட வளங்காப்பு
In– Vitro Conservation – ஆய்வுக்கூடப் பாதுகாப்பு

முனைவர் அ.போ. இருங்கோவேள்

Hyphema –குருதிவிழி
Chalazion –இமைவீக்கம்
Puffy eyes –விழிவீக்கம்